# இசைத் தமிழ்

## திருச்சி தியாகராஜன்



**இசைக்குடில் வெளியீடு**
சிவம்ஸ்
ஜி.2. 3ஆவது பிளாக்
17, துரைசாமித்தெரு, (செட்டித்தெரு அருகில்)
அய்யனாவரம்,
சென்னை-600 023.

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | இசைத் தமிழ் |
| ஆசிரியர் பெயர் | : | திருச்சி தியாகராஜன் |
| பொருள் | : | இசைப்பாடல்கள் |
| முதற் பதிப்பு | : | டிசம்பர், 2000 |
| நூலின் அளவு | : | 18.5 x 12.5 செ.மீ (கிரௌன்) |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : | 216 |
| தாளின் தன்மை | : | 10.5 கி.கி. |
| பைண்டிங் | : | செக்ஷன் தையல் |
| **நூலின் விலை** | : | **ரூ. 50.00** |
| வெளியீட்டாளர் | : | இசைக்குடில் வெளியீடு<br>சிவம்ஸ் ஜி.2. 3ஆவது பிளாக்<br>17, துரைசாமித்தெரு,<br>**அய்யனாவரம்,**<br>சென்னை-600 023. |
| ஒளி அச்சு | : | அன்னை கணிப்பொறி மையம்,<br>சென்னை - 600 033 |
| அச்சிட்டோர் | : | மணி ஆப்செட்,<br>சென்னை - 600 005. |

# நூல் உருவாக்கம்!

சென்னை எழும்பூரில் நடைபெற்ற நண்பர் குருமூர்த்தி இல்லத் திருமண நிகழ்ச்சிக்கு நண்பர்களுடன் சென்றிருந்தேன். அன்று வயலின் இசை வள்ளல் டாக்டர் திரு. குன்னக்குடி வைத்தியநாதன் இன்னிசை நிகழ்ச்சி ஏற்பாடு. பெரும்பாலும் இவரது எல்லா இசை அரங்குகளிலும், இசை அரசு. எம்.எம். தண்டபாணி தேசிகர், அவர்களால் இசை அரங்குகளிலும், இசைத்தட்டிலும் பாடிப் புகழ்தந்த எனது பாடலான ''தாமரைப்பூத்த தடாகமடீ'' பாடலை எத்தனை தடவைக் கேட்டாலும் சலிப்பதே இல்லை. எனது பாடல் என்பதைவிட அந்த அளவிற்கு மந்தமாருத மயக்கநிலையை இவரது இசை ஏற்படுத்தி விடும். என்னுடன் வந்த நண்பர்களுக்கும் இதே இசைந்த கருத்துத்தான். எனவேதான் அவரது வயலின் இசை நிகழ்ச்சியைக் கேட்டு ரசிப்பதற் கென்றே அந்தத் திருமணவிழாவுக்குச் சென்றிருந்தேன்.

இசை நிகழ்ச்சி தொடங்க சற்றுத் தாமதமானதால் திரு. குன்னக்குடி வைத்தியநாதன் அவர்களும் நானும் சற்றுநேரம் உரையாடிக் கொண்டிருந்தோம். அப்போது எனது பாடல்களில் சிலவற்றிற்கு மெட்டமைத்து, கேசட்டில் பதிவு செய்ய விரும்புவதாகவும், எனவே எனது பாடல்கள் அச்சாகியுள்ள நூல்களைத் தருமாறும் வேண்டினார். எனது பாடல்நூல்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பிரதிதானே இருக்கிறது. 50 ஆண்டுகளுக்கு முன்பு அச்சானதாயிற்றே என்ன செய்யலாமெனக் கேட்டதற்குப் பரவாயில்லை. அந்த

நூல்களின் பிரதிகளையே (Xerox) நகல் எடுத்து அனுப்பிவையுங்கள் அதுபோது மென்றார். சரியென்று சம்மதம் தெரிவித்து வந்தபின் இசைப்பாடல் ஏடுகளை (Xerox) நகலெடுக்கச் சொன்ன போது நகலக உரிமையாளர் இந்த நூல்கள் யாவும் 50 ஆண்டுகளுக்கு முன்பு அச்சாகியுள்ளதால், தாள்கள் அனைத்தும் பழுப்பு நிறமாகிவிட்டது. நகல் எடுத்தால் தெளிவாகத் தெரியாது என்றார். என்ன செய்வதென்று எனது நண்பர் புலவர் கவிஞர் வரதகோவிந்தராஜன் அவர்களோடு கலந்தாலோசித்தபோது இந்த மூன்று நூல்களிலும் உள்ள சில குறிப்பிட்ட பாடல்களை மட்டும் தேர்ந்தெடுத்துப் புதிதாகவே ஒரு நூல் அச்சிட்டு அவரிடம் தந்துவிட்டு, பாக்கிப்பிரதிகளை நூலகங்களுக்கு அனுப்ப ஏற்பாடு செய்யலாமெனவும் முடிவெடுத்தோம்.

''இசை அருவி'' எனது முதல் இசைப்பாடல்நூல் 1950 ஆம் ஆண்டுவெளியானது. இந்த நூலுக்குதான் 1953ஆம் ஆண்டு தமிழ் வளர்ச்சிக்கழகத்தின் (Tamil Academy) சார்பில் புதுடில்லியில் நடந்த தமிழ்த் திருவிழாவில், அப்போது கவர்னர் ஜெனரலாயிருந்த திரு.சி.ராஜகோபாலாச்சாரியார், கலைமகள் ஆசிரியர் திரு.கி.வா.ஜகந்நாதன் அவர்களோடு கவிதை, இசைப் பாடல் பகுதிக்குச் சிறந்த நூலெனத் தேர்ந்தெடுக்கப்பட்டு, டில்லி சென்றிருந்த எனக்கு டாக்டர்.எஸ்.ராதாகிருஷ்ணன் அவர்களால் பாராட்டுப்பத்திரம் வழங்கப்பட்டது. அடுத்து ''இசைஅருவி''இரண்டாம் பாகம் 1952இல் வெளியிடப் பட்டது. இந்த இரண்டு நூல்களுமே திருச்சி மலைவாசற்படி அருகேயிருந்த சிவாஜி அச்சுக் கூடத்தில் அச்சானது. இந்த அச்சுக் கூடத்தின் உரிமையாளர் எனது நண்பர் கவிஞர் திருலோக சீத்தாராம் ஆவார். நாடு விடுதலையடைந்த காலகட்டத்தில் திரு.சி. ராஜகோபலாச்சாரியார் மேற்கு வங்க கவர்னராயிருந்தபோது,

எட்டயபுரத்தில் கவி.சுப்பிரமணிய பாரதியாரின் நினைவு மண்டப அடிக்கல் நாட்டு விழாவுக்கு வந்திருந்தார். அறிஞர்களும் புலவர்களும் இசைக் கலைஞர்களும் பங்கேற்ற விழாவைக் காண திருச்சி ரயில்வே பணியிலிருந்த நானும் எட்டயபுரம் சென்றேன். சென்னையிலிருந்து திரு.கல்கி கிருஷ்ணமூர்த்தி, ம.பொ.சி. முதலானோர் அன்று நான் சென்ற மூன்றாம் வகுப்புப் பெட்டியிலேயே எட்டயபுரப்பயணம் வந்தனர்.

எட்டயபுரம் விழா முடிந்தபின் விழாவுக்கு வந்திருந்த பாரதியாரின் மகள்களான திருமதி தங்கம்மாள் பாரதியும் சகுந்தலா பாரதியும் கவிஞர் திருலோக சீத்தாராமோடு திருச்சி வந்து அவரது இல்லத்தில் தங்கியிருந்தனர். எனது 'இசைஅருவி' நூல் அச்சாகிக் கொண்டிருந்த நேரத்தில் திருலோக சீத்தாராமின் சிவாஜி அச்சகத்திற்குச் சிலநேரம் வந்து செல்வார்கள். அவ்வமயம் எனக்கு நன்கு அறிமுகமானதுடன் வள்ளலாரின் அருட்பாக்கள் பலவற்றை நான் மனப்பாடம் செய்து இசையோடு பாடுவதைக் கேட்டு, மிகுந்த பற்றுதலோடு வள்ளலாரின் அருட்பா நூல்கள் தங்களுக்கு வேண்டு மெனக் கேட்டு வீரேஸ்வரம் எனது இசைக்குடிலுக்கும் வந்து போனார்கள். 1952க்குப் பின் ரயில்வே பணியில் நான் மாற்றலாகி சென்னை வந்தவுடன் அடுத்த ஓரிரு ஆண்டிலென நினைக்கிறேன், தற்போது கலைவாணர் அரங்கமெனப் பெயர் மாற்றம் அடைந்துள்ள அன்றைய பாலர் அரங்கில் மராமத்துத்துறை அமைச்சராயிருந்த திரு.பக்தவத்சலம் தலைமையில் நடந்த பொங்கல் கவியரங்கத்தில் நான் திரு.அழ வள்ளியப்பா போன்றோரோடு திருமதி தங்கம்மாள் பாரதியும் பங்குகொண்டார். கவியரங்க மேடையில் என்னருகே அவர் அமர்ந்திருந்தபோது நான் கவிஞரா என்ன? என்று தன்னைத் தாழ்த்திக் கொண்டு பேசியது உள்ளத்தை நெருடியது.

நினைவில் வந்ததால் இவற்றையெல்லாம் எழுதுகிறேன். திருமதி தங்கம்மாள் பாரதியைச் சந்தித்தது அதுவே கடைசிமுறை.

சென்னை வந்தவுடன் மற்றொரு இசைப்பாடல் நூலான கலைவிருந்து' 1956ஆம் ஆண்டு சென்னை பிராட்வே யிலிருந்த மலர் நிலையத்தின் மூலமாக வெளியிடப்பட்டது. இதே நேரத்தில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் ''தேனருவி'' இசைப்பாடல் நூலும் மலர் நிலையத்தின் மூலம் அச்சாகி வெளிவந்தது. புரட்சிக் கவிஞர் ஓரிரு முறை மலர்நிலையம் வந்து போனார். ஆக, இசை அருவி இரண்டு பாகங்கள், கலைவிருந்து ஆகிய நூல்களிலிருந்த இசைப் பாடல்களில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து ''இசைத்தமிழ்'' எனும் தலைப்பில் வெளியிட வாய்ப்பு ஏற்பட்டதற்கு இசைவாணர் நண்பர் திரு குன்னக்குடி வைத்தியநாதன் அவர்களும் நூல் அச்சாகி வெளியாவதற்கு முழு ஒத்துழைப்பு நல்கிய புலவர் கவிஞர் வரதகோவிந்தராஜன் அவர்களுமே காரணமானவர்கள் என்பதைக் கனிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஒன்றிரண்டைத் தவிர இப்பாடல்கள் அனைத்தும் அய்ம்பது ஆண்டுகளுக்கு முன்பு இயற்றப் பட்டவை என்பதைக் கணக்கில் எடுத்துக் கொண்டு கவனிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

**-திருச்சி தியாகராஜன்**

# இசை அருவி எனும் இசைப்பாடல் நூலுக்குக் கவிஞர்கள் இசைந்தளித்த கருத்துரைகள்.

**கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை**

புத்தேரி
*17.3.50*

இசைஅருவி என்ற தலைப்பில் அன்பர் ஜி. தியாகராஜன் அவர்கள் இயற்றியுள்ள கீர்த்தனங்கள் சிலவற்றைப் படித்துப் பார்த்தேன். அவை பாடு வோருடையவும், கேட்போருடையவும் மனதைக் கவரத்தக்க முறையில் இனிய எளிய நடையில் அமைந்திருக்கின்றன. எல்லாச் சமயமும் ஒன்றே என்ற கருத்துடன் அவர்கள் எழுதியுள்ள கீர்த்தனங்கள் நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் உற்ற துணையாக உதவுமென்பது திண்ணம்.

தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இல்லையென்ற குறையைப் போக்க ஜி. தியாகராஜன் போன்ற கவிஞர்கள் முன்வந்திருப்பது தமிழர்களின் பாக்கியமே ஆகும். இசை அருவியில் படிந்து நான்பெற்ற இன்பத்தைத் தமிழர் அனைவரும் பெறுவார் களென்று நம்புகிறேன்.

-அன்பன்
**தேசிக விநாயகன்**

**நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை**
ஆஸ்தானக் கவிஞர்

நாமக்கல்
30.3.50

அன்பார்ந்த ஜி. தியாகராஜன் அவர்களுக்கு நலம். தங்களுடைய பாடல்களைக் கண்டு மிக்க மகிழ்சசி யடைந்தேன். பாடல்கள் நன்றாக இருக்கின்றன. தங்கள் கவித்துவத்தை மனமார வாழ்த்துகிறேன்.

அன்புள்ள
**வெ. இராமலிங்கன்**

**கவியோகி சுத்தானந்த பாரதியார் புதுச்சேரி:**

தியாகராஜன் அவர்களின் பாடல்கள் தெள்ளினிய தீஞ்சுவை தருகின்றன.

**-சுத்தானந்த பாரதி.**

**1950ஆம் ஆண்டில் வெளியான ''இசை அருவி'' இசைப்பாடல் நூல்தொடங்கி 1955ஆம் ஆண்டுவரை வெளியான இசை அருவி இரண்டாம் பாகம், கலை விருந்து ஆகியவைகளின் பாடல்கள் பற்றி இசைவாணர்களின் கருத்துரைகள்.**

இசை உலக ஜோதி, இசை மன்னர் மன்னன், அகில இந்திய நாதசுரச் சக்கரவர்த்தி, கர்நாடக சங்கீத ராஜப் பிரமுகர்

**திருவாவடுதுறை டி.என் ராஜரத்தினம் பிள்ளை** அவர்கள்.

திருவாளர் நண்பர் வித்துவான் திருச்சி ஜி. தியாகராஜன் அவர்கள் இயற்றிய பாடல்களை நன்றாக வாசித்தும் சிந்தித்தும் பார்த்தேன். இந்தப் பாடல்களில் ஒன்றையாவது குறைத்துக் கூற என் மனம் இடம் தரவில்லை. சொற்சுவையும், கருத்தும் மிளிர ஆக்கியுள்ளார். ஒரு கட்சியையோ ஒரு சாராரையோ குறிப்பிடாமலிருப்பதால் எல்லா இசைவாணர்களும் இசை நிகழ்ச்சிகளில் இந்தப் பாடல்களையே பாடி வரவேண்டு மென்பது என்னுடைய கோரிக்கை. இவரது நற்பணிக்கு இறைவனும் நாட்டுமக்களும் உதவி புரிவார்களாக. இன்னும் மேலும் மேலும் பல ஆயிரக்கணக்கான பாடல்கள் இயற்றி தமிழ்நாட்டிற்கு உதவுவாரென நம்புகிறேன்.

டி.என். ராஜரெத்தினம்
6.5.56.

**இசைப் பேராசிரியர், இசைப் பேரறிஞர்**
**இசைக்கல்லூரித் தலைவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம்**

**இசைஅரசு. எம்.எம். தண்டபாணி தேசிகர்.**

அன்பர் திருச்சி.ஜி.தியாகராஜன் அவர்களை ''பைந்தமிழ்ச் சோலையில் உள்ள'' தாமரை பூத்தத் தடாகத்தில் கண்டெடுத்தேன். இவரிடம் பேரன்பு கொண்டேன். பைந்தமிழ்ச் சோலையின் நிழலில் ''அழியா இன்பம்'' எய்தினேன். தாமரைபூத்த தடாகத்தில் குளித்தேன். குளித்த இன்பத்தால் இவர் பாடல்களை எல்லோரும் இசைத்து இன்பமெய்துவதற்காக ''அகிலமெல்லாம் கூவி அழைக்கிறேன்'' ஏன்? பாரெல்லாம் தமிழ்த்தாயின் பதம்பாட''

இவரது உள்ளம் ''இன்பவனம்'' இவரது எண்ணங்கள் நம்நாட்டுத் தமிழ்ப் பெரியார்களின் எண்ணங்கள். பண்பாடு தமிழரின் பண்பாடு. ஒழுக்கம் நேர்மையான ஒழுக்கம். இத்தனையும் இவர்பால் அமைந்துள்ளது. ஆகவே உள்ளம், எண்ணம், பண்பாடு, ஒழுக்கம் இவையனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றவர்களிடம் தான் கற்பனைக் கெட்டாத கருத்துக்கள் அடங்கிய கவிதைகள் தோன்றுமென்பது அறிஞர்கள் கண்ட உண்மை. குறிப்பாக நான் இவரது பாடல்களைப் பல ஆண்டுகளாக இசை அமைத்துப் பல இசை அரங்குகளில் இசைத்து வருவது நாடறிந்ததே. இன்னும் யான் இசைத்த இசைத் தட்டுகளில் பதிவுசெய்த ''தாமரைபூத்த தடாகமடீ'' என்ற பாடலை (Voice of America) அமெரிக்க வானொலியிலும் B.B.C. லண்டன் வனொலியிலும் ஒலிபரப்பி யுள்ளார்கள்.

இவருக்கு நீண்ட ஆயுளையும் கூடிய செல்வத்தையும் கொடுக்குமாறு எல்லாம் வல்ல தமிழ்த்தாயை வணங்குகிறேன். முத்தமிழ் வாழ்க!

**எம்.எம். தண்டபாணிதேசிகர்**
6.5.56

இசைக்கவி அரசு **மதுரை மாரியப்பசாமி** அவர்கள்

அன்பும், அறிவும் நிறைந்தவர் நமது நண்பர் திருச்சி ஜி.தியாகராஜன் அவர்கள். இவர் இயற்றிய இத் தமிழிசைப் பாடல்கள் யாவரும் பாடத்தகுந்த முறையில் எதுகை மோனையுடன் சொல் நயமும் பொருள்நயமும் பெற்றுப் பூரணப் பொலிவுடன் விளங்குகின்றன. இயலிசை நாடகம் என்ற முத்தமிழையும் முறையாய்க் கற்ற புலவர்களும், இசை

வாணர்களும், நடிகர்களும் பாராட்டும் தன்மையுடையன. எம்போன்ற திருவருட்துணையே நாடும் தொண்டர்கள் போற்றியும் ரசித்தும் எல்லாம்வல்ல முழுமுதற்கடவுள் திருவடிக்கே அர்ப்பணம் செய்யும் இயல்புடையனவாம்

**-மாரியப்பசாமி**

30.5.56

**சங்கீத சாகித்ய வித்வான், இன்னிசை அரசு, இசைச் செல்வர். கீவளூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள்.**

**கோவிந்தப்பநாயக்கன் தெரு, சென்னை**

***10.5.50***

வணக்கம்.

இந்தக் காலத்தில் இசைப்பாடல் இயற்றுவதென்றால் எவர் வேண்டுமானாலும் செய்யலாம் என்னும் அபிப்பிராயம் மலிந்துகொண்டு வருகின்றன.

இந்நிலைமையில் எனது நண்பர் திரு. தியாகராஜன் அவர்கட்கோ இயற்கையாகவே இசைப்பாடல் இயற்றும் தன்மை உடலிலேயே ஒன்றித்து இருப்பதாகவே தோன்றுகிறது, இவரது பாடல்களைப் பார்த்த எனக்கு.

ஆகவே, இவரது பாடல்கள் இசை உலகிற்குப் பெரிதும் பயன்படும் என்பதே எனது அபிப்பிராயம். மற்றும் இவருக்கு இயற்கையாகவே பாடும் பண்பும் அமைந்துள்ளது. நான் நேரிலேயே பிலஹரி ராகத்தை இவர் பாடியதையும் கேட்க நேர்ந்தது.

தங்கள்

**கீவளூர் மீனாட்சி சுந்தரம்**

ஏழிசை மன்னர் **திரு.எம்.கே.தியாகராஜபாகவதர்** அவர்கள்

அன்பரே! தங்களுடைய இசைப்பாடல்களின் தத்துவமே தனிச்சிறப்பு வாய்ந்தவை. இசையுடன் சேர்த்துப் பாடல்களையும் பாடினால்தான் சில பாடல்கள் கேட்கச் சுவையாயிருக்கும். தங்களுடைய பாடல்களை இசை இல்லாமல் படித்தாலும் இன்பம் ஊட்டுகிறது. அத்துடன் இசையும் சேர்ந்துவிட்டால் உங்கள் பாடல்களின் இனிமை இன்பத்தைச் சொல்லவா வேண்டும்! இசைப்பாடல்களைத் தொடுக்கும் உங்கள் இன்ப உள்ளம் இமயத்தின் அருவிபோல் பொங்கட்டும்.

**-எம்.கே. தியாகராஜ பாகவதர்**
30.5.56

ரஞ்சிதகான இசைமணி **மதுரை எஸ்.சோமசுந்தரம்** அவர்கள்

நண்பர் திருச்சி தியாகராஜன் அவர்கள் கன்னித் தமிழுக்குச் செய்து வரும் தொண்டு நூலாக வருவதறிந்து மிகமிக மகிழ்வுற்றேன். எளியநடை, காலத்திற்கேற்ற கருத்து கற்பனைச் சிறப்பு இவைகளனைத்தும் அடங்கிய இவரது பாடல்களை யான் எனது இசை நிகழ்ச்சிகளில் பெரிதும் பயன்படுத்தி வருகிறேன். இப்பாடல்களெல்லாம் புத்தக வடிவில் வருவது மகிழ்ச்சிக் குரியதாகும். தமிழ்மொழிக்கு இவர் புரியும் தொண்டு பாராட்டிற்குரியது. இவரது முயற்சிக்குக் கலைஞர்களும், கற்றாரும் பெரிதும் ஆதரவளிப்பார்களென்பது எனது திடமான நம்பிக்கை.

**-எஸ்.சோமசுந்தரம்**
4.6.56

இன்னிசை வள்ளல் இசைச் சித்தர் **சிதம்பரம்.எஸ்.ஜெயராமன்** அவர்கள்

கவிஞர்கள் உள்ளம் நிறைவுடையது. அவர்களின் கண்களில் புலனாகும் பொருள்கள் எதுவாயினும் அவற்றின் நுண்பொருளையும், அவைகளைப் பலவகையாகப் பெருக்கிக் காண்பதுமே அவர்களின் இயற்கையாகும்.

அமைவு என்பது மாந்தரில் மிகச் சிலருக்கே இயைவ தாகும். அவற்றுள்ளும், இயற்கைக்கும் இலக்கணத்திற்கும் அடங்கியதாகவும், இயற்கையையும் மேம்பட்டதாக அவ்வமைப்பை ஆக்கித் தரும் ஆற்றல்வாய்ப்பதும் அரிதாகும். அவ்வாறு கிடைப்பினும் கிடைத்ததைப் பயன் படுத்தாதவாறு வீணே போக்குவோரும் உள்ளனர். திரு.திருச்சி தியாகராசன் அவர்கள் தமக்குரிய ஆற்றலை நாட்டு நலனுக்கு அளித்துள்ளமையையும் ''கவிதைபுனைவது கட்டிடம் அமைப்பது போன்ற ஒன்றுதான்'' எனக் கூறுவார் நடுவண் கவிதைகளின் உண்மை உயர்வு தென்படுமாறு, அதிலும் இசைப்பாடல்களாக யாத்துள்ள திறமையும் பாராட்டிற்குரியது.

இவரது பாடல்களிலே இளைஞரும், முதியரும், காடுதிருத்துவோரும், காவலர் கணக்காயரும், இன்பக் காதலரும் அன்புக் குழந்தைகளும் சுவைக்கத் தக்கக் காட்சிகள், நிகழ்ச்சிகள் உணர்ச்சிகள் நிறைந்திருக்கும். இவ்வண்ணம் யாவரும் இன்புற எண்ணி யாத்துள்ள இவரது பாடல்கள் என்றென்றும் யாவர் மாட்டும் நிலவிப் புகழ்பெறு சிரஞ்சீவியாய் விளங்க எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

**-சிதம்பரம்.எஸ்.ஜெயராமன்**

27.7.56.

**"இசை அருவி" நூல்பற்றி திருச்சி வானொலி நிலையத்தி லிருந்து 1952ஆம் ஆண்டு மே, திங்கள் 24ஆம் நாள் ஒலிபரப்பப் பட்டது. கருத்துரை வழங்கியவரின் பேச்சு வானொலி நிலையத்தார் இசைவு பெற்றது.**

தமிழ் முப்பெரும் பிரிவினதென்பதும் இசைத் தமிழ் நடுவில் அமைந்து கற்றோரையும், மற்றோரையும் பிணைக்க வல்லதென்பதும் யாவரும் அறிவர். பாக்கள் பலதுறையிலும் உணர்ச்சியூட்டவல்லன. போர்க்களத்திற்குச் செல்லும் வீரர்களும் உணர்சசி உண்டாவதற்கும் பாடுகின்றனர். பக்தர்களும் மனம் ஒருமைப்படப்பாடுகின்றனர். நாட்டுமக்கள் நல்லுணர்விழந்து சோம்பிக்கிடந்த காலையும் பாட்டாலே எழுச்சியுறுகின்றனர். பரமனையும் பாடவேண்டும் பாடுபட்டுப் பயன்பெறாத பாட்டாளியையும் பாடவேண்டும். சீர்கெட்ட சமுதாயம் சிறப்புற நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் அரசியலறிவும் உண்டாக்கும் பாக்களும் இன்னிசை அரங்கில் இடம்பெறல் வேண்டும். திருச்சி.ஜி.தியாக ராஜன் அவர்கள் மிக அழகாக மேலே சொன்ன கருத்துக் களெல்லாம் கொண்டு இசைப்பாக்கள் அமைத்துள்ளார்.

மக்கள் ஊழ்வினையை நம்பி வாழ்விழந்து போகாமல் தன் முயற்சியினாலேயே சிறந்துவாழவேண்டும். பொன்னும் பொருளுமே புகழென மதியாது பொதுத்தொண்டில் ஈடுபடுதலும் தன்னலமறுத்தலும் வேண்டும். பணமே கதியென வாழ்தல் கூடாது. பகுத்தறிவுடையோர்க்கே பணிதல் வேண்டும். வேதனைதரும் சாதிமதப் போரொழிந்து அன்பு பரவுதல் வேண்டும். கலைஞர் வறுமையின்றி வாழ்தலும், மெய்க்கருத்துக்கள் நாட்டு மக்களிடைப் பரவுதலும் இன்றியமையாதன. காசு பணத்திற்காகக் கருத்தை விற்றல்

கூடாது. பாட்டாளி மக்களின் உழைப்பையும் அவருழைப்பால் பிறர்வாழும் சுகத்தையும், பாடுபடுபவர் கால்வயிற்றுக் கஞ்சிக்குப் படும் அவதியையும் பாட்டில் அமைத்துப் பாடுதல் வேண்டும். வள்ளுவர் குறளும், திருவாசகம், தாயுமானார் வள்ளலார் ஆகியோர் வாக்கும் தமிழ்நாட்டில் எடுத்தியம்பல் வேண்டும். அருமைத் தமிழின் வழி வழி வரலாற்றை, பாராண்ட தமிழ்மன்னர் சீரோடியங்கியதை அகில உலகமெங்கும் முழங்குதல் வேண்டுமென்ற இத்தகைய கருத்துக்களை யெல்லாம் தம் இன்னிசைப் பாட்டில் அமைத்துள்ளார்.

**1953ஆம் ஆண்டு தமிழ்வளர்ச்சிக் கழகத்தின்(Tamil Academy)சார்பில் டில்லியில் நடந்த தமிழ்த்திருவிழாவில் வழங்கிய பாராட்டுப் பத்திரம்**

1950-52ஆம் ஆண்டுகளில் வெளியான நூல்களில் கவிதை இசைப்பாடல் பகுதியிலே ''இசைஅருவி'' என்னும் நூல் பாராட்டுக்குரியதெனத் தேர்ந்தெடுக்கப்பட்டு அதன் ஆசிரியர் திரு.ஜி.தியாகராஜன் அவர்களுக்கு டில்லியில் நடந்த தமிழ்த் திருவிழாவில் இப்பாராட்டுப் பத்திரம் வழங்கப் பெற்றது.

தலைவர்: தமிழ்வளர்ச்சிக்கழகம்

1972ஆம் ஆண்டு ஜூன் 25ஆம் தேதி தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் ''கலைமாமணி'' பட்டம் வழங்கியபோது அந்தச் சங்கம் வெளியிட்ட நூலிலிருந்து இசை அரசு எம்.எம்.தண்டாணி தேசிகர் அவர்களால் படிக்கப்பட்டது.

திருச்சி.திரு.தியாகராஜன் அவர்கள் ஆயிரம் இசைப் பாடல்களுக்கு மேல் எழுதியுள்ளார். ''இசைஅருவி'' ''கலை விருந்து'' ''சிந்தனைச் செல்வம்'' போன்ற நூல்களை

ஆக்கியுள்ளார். 1949ஆம் ஆண்டிலிருந்து இவருடைய பாடல்கள் அகில இந்திய ரேடியோவிலும் ''வாய்ஸ் ஆப் அமெரிக்கா'' பி.பி.சி.லண்டனிலிருந்தும் ஒலிபரப்பப் பட்டுள்ளன. 1953இல் டில்லியில் நடந்த தமிழ்வளர்ச்சிக் கழக விழாவில் ''இசைஅருவி'' எனும் நூல் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பாராட்டப் பெற்றார். இவருடைய பாடல்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசைப் பிரிவில் பாடல்களாக வைக்கப்பட்டுள்ளன. திரு.ரா.பி.சேதுப் பிள்ளை அவர்களால் தொகுக்கப் பெற்ற ''கவிதைக் களஞ்சியத்தில் இவரது பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

இவரது பாடல்களை திரு.எம்.கே.தியாகராஜபாகவதர், திரு.எம்.எம்.தண்டபாணி தேசிகர், சிதம்பரம் எஸ்.ஜெயராமன், மதுரை திரு.சோமு போன்ற சங்கீதக் கலைஞர்கள் வானொலியிலும், இசைத்தட்டிலும் பாடியுள்ளார்கள். இதுவரை 50திரைப் படங்களுக்குமேல் பாடல்கள் எழுதிப் புகழ் பெற்றுள்ளார். எல்லாக் கலைஞர்களாலும் பாராட்டுப் பெற்றுச் சிறந்த சாகித்ய கர்த்தாவாக விளங்குபவர் திருச்சி திரு.தியாகராஜன் அவர்கள்.

இத்துறையில் இவருடைய கலைச்சேவையைப் பாராட்டி சிறப்பு விருது வழங்குவதோடு, தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் ''கலைமாமணி'' என்ற பட்டத்தையும் பெரியவர்கள் முன்னிலையில் மகிழ்வுடன் சூட்டுகிறது.





**கவிஞர் திருச்சி தியாகராசன் அவர்கள் எண்பது வயது இளைஞர்.** இந்த நாட்டின் விடுதலைப் போராட்ட வீரர். காங்கிரஸ் பேரியக்கத்தில் மார்க்சியத் தத்துவங்களில் ஆழங் கால்பட்டவர். பொதுவுடமைக் கொள்கை யால் ஈர்க்கப்பட்டு அக் கட்சியின் பேச்சாளராக தமிழகத்தின் 4000 கிராமங் களுக்கு மேலாக பட்டி தொட்டிகள் எங்கும் விழிப்புணர்வை ஊட்டி சிந்திக்க வைத்தவர்.

சொல்லும் செயலும் வேறுபடாத பேரறிவாளர். இவற்றுக்கும் மேலாக சிறந்த மனித நேய மாமனிதர்.

திரைப்படப் பாடலாசிரியராக ஒரு காலத்தில் பெரும்புகழ் பெற்ற இவரின் இசைப்பாடல்களைத் தியாகராஜ பாகவதர், தண்டபாணி தேசிகர் போன்ற இசைப் பேரறிஞர்கள் தமிழக மேடைதோறும் பாடி மேன்மை செய்தனர். 1972ஆம் ஆண்டிலேயே கலைமாமணி விருது பெற்றவர். தமிழ்இசைப்பாடல்கள் அரிதான காலத்தில் இவர் தமிழிசை பாடலுக்கு செய்த தொண்டு அளவிடற்கரியது.

இவரின் இசைப்பாடல்கள் அண்ணாமலைப்பல்கலைக் கழகம் மாணவர்களுக்குப் பாடமாக வைத்துப் பெருமை சேர்த்தது. சாகித்ய அகாதமியின் தலைவராக நேரு இருந்தபோது, இவரின் பாடல்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு நேருவால் சிறப்புச் செய்யப்பட்டது. இவை ரா.பி. சேதுப்பிள்ளையால் 18மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இவரின் இசைத்தமிழ் என்ற நூல் இதற்குச் சான்றாகும். இவரைத் தமிழகம் மறந்தாலும் இவரின் திரைஇசைப்பாடல்களைத் தமிழகம் மறக்காது.

**-புலவர் வரத கோவிந்தராசன்**

# பொருளடக்கம்





# பொருளடக்கம்

## ஆடி ஆடி அசைந்தாள்

ராகம்: பைரவி தாளம்: ஆதி

எடுப்பு

ஆடி ஆடி அசைந்தாள்-அவள்
ஆடை பளபளக்க மேடை மினு மினுக்க -ஆடி

தொடுப்பு

பாடிடும் பூங்குயில் பக்கத்திலே இசைக்க
பஞ்சவர்ணக் கிளிகள் பார்த்துப் பார்த்து ரசிக்க
-ஆடி

அமைதி

குவிந்தவாய் திறந்து சிவந்த இதழ் விரித்து
குத்து விளக்கு மொட்டு பக்குவமாய் மறைத்து
கவிவாணர் கலைவாணர் கருத்தையெல்லாம் இழுத்து
கதிரவன் முகம் பார்த்துப் புதுவண்ண நிறம் காட்டி
-ஆடி

மணிஇழைத்த பதக்கம் மார்பினிலே துலங்க
மதுவண்டின் ரீங்காரம் விதம் விதமாய் முழங்க
தணியாத காதலினால் முகம் மலர்ந்து விளங்க
தாமரைப் பெண்ணழகி ஒருகாலால் இடைகுலுங்க
-ஆடி

## ஆடும் அருவி

ராகம்: சாருகேசி தாளம்: ஆதி

எடுப்பு

ஆடிவரும் அருவியிலே அமுத இசை கேட்குதம்மா!
அள்ளிப் பருகிடவே உள்ளம் துடிக்குதம்மா!
-ஆடி

தொடுப்பு

பாடும் குயிலினமும் பச்சைப் பசுங்கிளியும்
பாய்ந்தோடும் மானினமும் நீர்வேட்கை கொள்ளுதம்மா
-ஆடி

அமைதி

கொடிமுல்லை மாந்தளிரும்
குலுங்கும் சுவைக் கனியும்
குளித்துக் குளித்து அதில்
கொள்ளையின்பம் காணுதம்மா!
பொடியாம் மகரந்தம்
பூவண்டு தூவிடவும்
பொன்னிறக் கதிரோனும்
புனலாடி நீந்துகிறான்
-ஆடி

## அழகுத் தாமரை!

ராகம்: திலங் தாளம்: ஆதி

எடுப்பு

அழகுத் தாமரை ஆடுகிறாள்-வண்டு
ஆனந்தமாய் இசைபாடுது பார்!

-அழகு

தொடுப்பு

அழைக்கும் கரம் குவிந்ததென-மொட்டு
அசைந்து அசைந்து நிற்பதைப் பார்!

-அழகு

அமைதி

தூயதென்றல் சுருதிசேர்க்க-அலை
தோம் தோமென்று தாளம்போட
பாயும் தேனை விருந்தளித்தே
பறவை இனங்கள் பார்த்திடவே

-அழகு

# நிலவு நீராடுகிறாள்

ராகம்: தேஷ் தாளம்: ஆதி

எடுப்பு

நீலவானத் தடாகத்திலே
நிலவுப் பெண்வந்து நீராடுகிறாள்
-நீல

தொடுப்பு

கோலமுடன் மின்னும் தாரகைகள்
குலுங்கும் அல்லிமலர்க் கூட்டமோட!
-நீல

அமைதி

மாலைநேரம் தோன்றும் வண்ணமெல்லாம்-எழில்
சோலைதானோ அவள் சேலைதானோ?
காலைக் கதிரவன் காதலனோ-அந்தக்
கன்னிப்பெண் ஓடி மறைவதேனோ!
-நீல

## இளந்தென்றலே!

ராகம்: நடபைரவி தாளம்: கண்டசாபு

எடுப்பு

இளந்தென்றலே உன் இதயம் கண்டுறவாட
ஏங்குகிறேன் வா! வா! -இளம்

தொடுப்பு

குளிர் முல்லைத் தனைத்தழுவிக்
கொட்டும் அருவி தொட்டுக்
கோடையில் அலைந்தாலும்
மாறுபடா மனம் கொண்டாய் -இளம்

அமைதி

சந்தனச் சோலையிலே
தவழ்ந்து விளையாடுகிறாய்
தாமரைப் பொய்கையிலும்
நீராடி மகிழ்கிறாய்
கொந்தளிக்கும் கடல் அலையில்
குதித்தே நீ ஓடுகிறாய்
குவலய மெல்லாம் மகிழ
கொள்ளையின்பம் கூட்டுகிறாய்
-இளம்

## தங்கத் தாமரை!

ராகம்: பியாக் தாளம்: ஆதி

எடுப்பு

தங்கத் தாமரை பூத்தது போலே
செங்கதிரோன் தோன்றும் சிங்காரம் பாராய்
-தங்க

தொடுப்பு

பொங்கும் கடல் தனையே பொய்கையாய்க் காட்டி
புதுப்புது வண்ணமெல்லாம் அதிசயமாய்த் தீட்டி
-தங்க

அமைதி

மஞ்சள் நிற வெய்யிலால் மாந்தளிர் பொன்னாக
மரகதப் பட்டெனவே தரையெங்கும் எழில்தூவப்
பஞ்சவர்ணச் சேவல் சிறகடித்தே கூவப்
பார்காக்கும் உழவன் ஏர்தூக்கியே ஏக
-தங்க

## வட்டமதி!

ராகம்: ஜெயந்தசேனா தாளம்: கண்டசாபு

எடுப்பு

வானமென்னும் தோட்டத்திலே
வண்ணமலர்க் கூட்டத்திலே
வட்டமதி வந்து வந்து
விந்தை பல காட்டுகிறாள் -வானமென்னும்

தொடுப்பு

கூனப்பிறைவடி வாய் ஓடம் வரும் அழகாய்
கொடுமை இருளகற்றும் குவலயத்தின்
விளக்காய்
-வானமென்னும்

அமைதி

காதலர் அன்பினிலே
தீராத இன்பமூட்டி
கவிதை புனைவோர்க்கும்
புதுமை தனைக் கூட்டி
மாதர் தம் குழந்தையுடன்
மகிழ்ந்தாடும் எழில்தீட்டி
மாணிக்கக் கோலமுடன்
கீழ்வானில் முகம் காட்டி
-வானமென்னும்

## பாயும் ஓடை

ராகம்: கமாஸ் தாளம்: கண்டசாபு

எடுப்பு

பாய்ந்து வரும் ஓடையே உன்
பாங்கு கண்டே மகிழ்ந்தேன்
பதமுடன் நின் அனுபவத்தை
இதங் குளிரக் கூறாயோ -பாய்ந்து

தொடுப்பு

மாய்ந்த பல்லாயிரம்பேர்
மனப்பான்மை அறிந்திருப்பாய்
மாபெரும் அறிஞரெல்லாம்
நீராடத் தெரிந்திருப்பாய் -பாய்ந்து

அமைதி

மூலிகை மலர்க் கனிகள்
மூழ்கி யுன்னுள் ஆழ்ந்திருக்கும்
காலமென்னும் மின்னலதே
கண்மூடித் துயின்றிருக்கும்
கோலமுடன் கன்னியர்கள்
குடமேந்தி வந்திருப்பார்
வேலையே பெரிதெனவே
நாளெல்லாம் ஓயாமல் -பாய்ந்து

## வெள்ளிமலர்!

ராகம்: அரிகாம்போதி தாளம்: ஆதி

எடுப்பு

வெள்ளியினால் செய்த சின்னச் சின்ன மலர்
விண்ணிலே கண்ணைச் சிமிட்டுதடீ-அதை
அள்ளிமுடிந்திட அழகுநிலா மங்கை
ஆடி வருவதைப் பார்!
-வெள்ளி

தொடுப்பு

அல்லிமலரெல்லாம் அதிசயமாய் விண்ணை
அண்ணாந்து பார்க்குதடீ-அங்கே
சில்லென வீசிடும் தென்றல் வந்து வந்து
*தெம்மாங்கு பாடுதடீ!
-வெள்ளி

அமைதி

வட்ட வடிவ நிலவுச் சுடரிலே
வையகம் ஆனந்தம் காணுதடீ-அது
பட்ட இடமெல்லாம் ஏழைச் செல்வரென்னும்
பாகுபாடு ஏதும் இல்லையடீ!
-வெள்ளி

* (தென்பாங்கு)

## புதுயுகம் பாரீர்!

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

எடுப்பு

பொழுது புலர்ந்தது புதுமலர் பூத்தது
புள்ளினம் இசைத்தன புதுயுகம் பாரீர்!
-பொழுது

தொடுப்பு

பழுதில்லா மனம் பண்பாடும் கானம்
பலனையே பார்த்திடத் துலங்கிடும் ஞானப்
-பொழுது

அமைதி

அகந்தையெனும் இருளை அடியுடன் நீக்கி
அத்துடன் ஒளியெனும் சக்தியை ஆக்கி
இகந்தனில் விளைந்திடும் இருவினை போக்கி
என்றுமே நிலைத்திடும் இன்ப வானை நோக்கிப்
-பொழுது

✱ 2 களை சவுக்கம்

## எழுந்தது மதி

ராகம்: சாவேரி தாளம்: ஆதி

எடுப்பு

எழுந்தது மதியே! விழுந்தது இருளே
இதயத்தில் பூத்தது புதுமை செய் அருளே!
-எழுந்தது

தொடுப்பு

இழந்த இன்பம் மீண்டும் அடைந்ததைப் போலே
எண்ணில்லாத் தாரகை சூழவிண் மேலே
-எழுந்தது

அமைதி

வட்ட வெள்ளிக்கிண்ணம் தொத்திய தோர் எழிலாய்
வார்த்த வண்ணப் பொட்டு வானிலிட்ட வடிவாய்
கொட்டிய வைரமணிக் குவியலின் ஒளியாய்
கொஞ்சும் புறா சிறகைக் குலுக்கிவரும் நடையாய்
-எழுந்தது

## புது மலர்ச் சோலை

ராகம்: காபி தாளம்: ஆதி

எடுப்பு

புதுமலர்ச் சோலையிலே பொன் வண்டு பாடுதே
புள்ளிமான் கன்றுடனே துள்ளி விளையாடுதே
-புதுமலர்

தொடுப்பு

கதிரவன் உதயமே கண்ணைப் பறிக்குதே
கருங்குயிலின் இசையே காதில் இனிக்குதே
-புதுமலர்

அமைதி

கிளைக்குக் கிளை அணிலே பழத்தைச் சுவைக்குது
கிளியோ சிறகடித்து மழலை துவக்குது
தளிரெல்லாம் பொன்தகடாய் ஒளியைப் பெருக்குது
தாமரை இதழ்காட்டி வா! வா வென்றழைக்குது
-புதுமலர்

# இளவேனில்!

ராகம்: இந்தோளம் தாளம்: கண்டசாபு

எடுப்பு

இன்பம் வழங்கவரும் இளவேனில் பெண்ணே - உன்
அன்பு முகம்காணவே நான் அழைக்கின்றேன் வாவா
-இன்பம்

தொடுப்பு

துன்பம் தனைத்துரத்தி தூயதென்றல் அளித்து
சூழும் தடாகமெல்லாம் தாமரை மலர் குவித்து
-இன்பம்

அமைதி

மதுவுண்ணும் வண்டினங்கள்
மலர்க்கொடியில் சுருதி அமைக்க
மாங்குயில் இசைமுழக்க
மரமெங்கும் தளிர்தழைக்க
கதிரோன் வடக்கிருக்க
காயும் பனி மரிக்க
புதுவண்ண உடையுடுத்தி
பொங்கும் நலம் செழிக்க
-இன்பம்

## கதிரோன் காட்சி!

ராகம்: திலங் தாளம்: ஆதி

எடுப்பு

கண்ணைக் கவரும் பொன்னாற்றிலே
கதிரோன் குளிக்கும் காட்சியடா!
-கண்ணை

தொடுப்பு

வண்ண எழில் தரும் அந்தியிலே
மங்கை நிலாவரும் இன்பத்திலே
-கண்ணை

அமைதி

கலைஞனும் கவிஞனும் காணாத-பெருங்
காவிய ஓவியம் தீட்டுகிறான்
அலைந்த கணவன் மகிழ்ந்திட-நிலா
ஆயிரம் விளக்கை ஏற்றுகிறாள்
-கண்ணை

## இயற்கையின் வனப்பு!

ராகம்: சிந்துபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

இறைவனின் படைப்பா? இயற்கையின் வனப்பா?
எதுவென்று தெளியாமல் தடுமாறுதே உலகம்
-இறைவனின்

தொடுப்பு

மறைவாய் அரும்பினிலே மணம் நிறம் புதைப்பது
மலர்ந்த பின்னே தேனைச் சுவையுடன் அளிப்பது
-இறைவனின்

அமைதி

மண்ணினுள்ளே பொன்னும் வைரமணிக் கல்லும்
வயலில் தலையசைக்கும் வளமான செந்நெல்லும்
தண்ணீர்பட்ட கணமே தழைக்கும் பசும்புல்லும்
சலசலவெனும் ஓடைதாளக் கட்டின் சொல்லும்
-இறைவனின்

# மானிடப் பிஞ்சு!

*ராகம்: நீலாம்பரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*வஞ்சக மில்லா மானிடப் பிஞ்சே!*
**வான்மதியே!** *இன்பத் தேன்துளியே!*
-வஞ்சகம்

தொடுப்பு

*மஞ்சம் உனக்கு என்நெஞ்சமடீ*
*மான்விழி மூடியே நீயுறங்காய்*
-வஞ்சகம்

*அமைதி*

*ஆசையென்னும் கடலில் அள்ளிய வெண் முத்தே*
*அரும்பு மல்லிகையே-செங் கரும்பின் தீஞ்சுவையே*
*பாசமென்னும் வலையால் - என்னைப் பற்றி இழுத்துவிட்டா*
*பாவலர் கற்பனையின் ஓவியமே உறங்காய்!*
*பாதம் இரண்டும் செந்தாமரையோ-உடல்*
*பத்தரை மாற்றுத் தங்கச் சிலையோ!*
*ஆதவனும் மாலை மறைந்திடுவான்-உந்தன்*
*அழகு என்றென்றும் மாறாதே*
-வஞ்சகம்

## ஆடும் அழகே!

ராகம்: மோகனம் தாளம்: ஆதி

எடுப்பு

ஆடும் அழகே வா!வா!
அமுதா யினிக்கும் மழலை தெளித்தே
-ஆடும்

தொடுப்பு

தேடிய வடிவே! பேசும் சிலையே!
சீருடன் தவழ்ந்து வாரியணைத்திட
-ஆடும்

அமைதி

மாசில்லா மதியாய் வந்தனையே
மாதுளம் பூவுன் புன்னகையே
ஆசைக் கனியாய்ப் பிறந்தனையே
அன்புச் சுடராய் நிறைந்தனையே
-ஆடும்

## காரணம் சொல்!

*ராகம்: பூர்விகல்யாணி* *தாளம்: ஆதி*

*எடுப்பு*

*காரணம் சொல் நிலவே-நீ*
*களங்கம் அடைந்தநிலை விளங்கிடவே*
*-காரணம்*

*தொடுப்பு*

*பாரினில் பொய் நெஞ்சர் பகட்டுதனைக்கண்டே*
*பரிகசிக்கும் வடிவாய் அமைந்தனையோ!*
*-காரணம்*

*அமைதி*

*தூயமனிதரைப் போல்நேயமுடன் நடிக்கும்*
*தீயவர் கொள்கையிதோ!-அன்றி*
*வாயளவில் அன்பாய் மாயக் கண்ணீர் வடிக்கும்*
*வஞ்சகர் படப்பிடிப்போ!-மெய்க்*
*-காரணம்*

# அல்லிப் பொய்கை

ராகம்: புலுசுமத்யமம் தாளம்: ஆதி

எடுப்பு

அல்லிமலர் பூத்த பொய்கையிலே-நிலா
அழகுப் படகில் உலாவுகிறாள்
-அல்லி

தொடுப்பு

சில்லென வீசிடும் தென்றலதே-நம்
சிந்தனைக்கே இன்பம் தந்திடுதே
-அல்லி

அமைதி

வட்டவடிவ இலைத் தட்டினிலே-முத்தைக்
கொட்டியிருக்கும் எழில் கொஞ்சமோடீ
நட்ட நடுநிசியில் மின்மினியே-இந்த
ஞாலத்தின் கோலத்தால் நாணுதடீ
-அல்லி

## இயற்கைக் கன்னி

ராகம்: கேதாரம் தாளம்: ஆதி

எடுப்பு

இயற்கைக் கன்னியவள் எழில் நடம் புரிகின்றாள்
என்னென்னவோ மனதில் பரவசம்தருகின்றாள்
-இயற்கை

தொடுப்பு

புயலும் தென்றலுமாய்ப் புரட்சி செய்தே மகிழ்வாள்
பொங்கும் கடல் அலையால் சங்கநாதம் பொழிவாள்
-இயற்கை

அமைதி

மலை அருவி அசைவால் இடைநெளிவைக் காட்டி
மல்லிகை அரும்பினால் புன்சிரிப்பை மூட்டி
சலசலவெனும் ஓடை சதங்கை ஒலி மீட்டி
தாமரைக்கைகளால் வா! வாவெனக் காட்டி
-இயற்கை

## அந்திவான்!

ராகம்: கானடா தாளம்: ஆதி

எடுப்பு

அந்திவான் அழகிலே சிந்தை மயங்குதே!
அகந்தனிலே இன்ப அருவி முழங்குதே!
-அந்தி

தொடுப்பு

எந்தெந்தத் திக்கிலும் எழில்வளம் காணுதே
எண்ணில்லாக் கற்பனைகள் இதயத்தில் தோனுதே
-அந்தி

அமைதி

பொன்னை உருக்கியே புரண்டோடும் வெள்ளமோ
புதுமலர் வனம்காட்டும் விதவித வண்ணமோ
கண்ணைக் கவரும் கதிரோன் தீப்பந்தமோ
காலக் கலைஞனின் ஓவியச் சின்னமோ
-அந்தி

## பைங்கிளி

ராகம்: கோபிகாதிலகம் தாளம்: ஆதி

எடுப்பு

பறந்து பறந்து அலைவதேன்-கொவ்வைப்
பழமாய் அலகைப் படைத்தும் இரைக்குப்
-பறந்து

தொடுப்பு

நிறைந்த செல்வம் குவிந்தாலும்-நெஞ்சம்
நிறையா மனிதர் நிலையாய்க் கிளியே!
-பறந்து

அமைதி

பச்சைப் பட்டாய் உடல் அமைந்தாய்-கரும்
பாசியைக் கழுத்தில் ஏன் அணிந்தாய்
கொச்சை மழலையால் பேசுகின்றாய்-உன்னைக்
கொஞ்சிடக் குழந்தைகள் தேடுகின்றார்
-பறந்து

## புதுமைத் தமிழ்!

*ராகம்: சாவேரி* *தாளம்: ரூபகம்*

*எடுப்பு*

*நிலவு மங்கை எழுந்தாள்-என்*
*நினைவில் இன்பம் பொழிந்தாள்*
*-நிலவு*

*தொடுப்பு*

*குலவு தமிழ்க்கலை அமிழ்தாம்*
*கோலம்காண நீல வானில்*
*-நிலவு*

*அமைதி*

*கவிதைகளில் சுவை நிறைந்தாள்*
*கவலையெலாம் களைந்தெறிந்தாள்*
*புவிமேல் வெள்ளிப் பூச்சொரிந்தாள்*
*புதுமைத் தமிழ் அதில் வரைந்தாள்*
*-நிலவு*

## பாரதித் தமிழ்

ராகம்: சாருமதி தாளம்: ஆதி

எடுப்பு

தித்திக்கும் செந்தமிழால் எத்திசையும் முழங்கி
தீராத புகழ்பெற்ற பாரதியே வணக்கம்
-தித்திக்கும்

தொடுப்பு

கத்தும் கடலடியில் முத்துக் குளிப்பதெனக்
கற்பனை ஆழத்திலே அற்புதக் கவிதன்னை
-தித்திக்கும்

அமைதி

சிற்பியின் கைபடும் கற்சிலை போலே
சிந்தனையைத் திருத்திச் செய்தாய் பன்னூலே
கற்ற அறிஞரையும் கவரும் பண்பாலே
கலைமணத் தமிழ்தந்த புலமையினாலே
-தித்திக்கும்

# பொருளடக்கம்

## தாமரை பூத்த தடாகம்!

ராகம்: இந்துஸ்தான் காந்தாரி தாளம்: ஆதி

எடுப்பு

தாமரை பூத்தத் தடாகமடீ-செந்
தமிழ்மணத் தேன் பொங்கிப் பாயுதடீ-ஞானத்
-தாமரை

தொடுப்பு

பாமழையால் வற்றாப் பொய்கையடீ-தமிழ்ப்
பைங்கிளிகள் சுற்றிப் பாடுதடீ-ஞானத்
-தாமரை

அமைதி

காவியச் சோலையதன் கரையழகே-பெருங்
கவிஞர்கள் கற்பனைக்கோர் தனிச் சுவையே
ஆவிமகிழும் தமிழ்த் தென்றலதே-இசை
அமுதினைக் கொட்டுதுபார் இதனருகே-ஞானத்
-தாமரை

## தமிழ்ப் பாவை!

*ராகம்: செஞ்சுருட்டி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*சின்னஞ் சிறு வயதினிலே என்னிடம் வந்தாள்-என்*
*அன்னை தெய்வம் அந்தப் பெண்ணைஅறிமுகம் செய்தாள்*
*-சின்னஞ்சிறு*

தொடுப்பு

*கன்னல் பாகுகற்கண்டெல்லாம் நாவிலே இனிக்கும்- அந்தக்*
*காரிகையாள் பெயரைக் கேட்டால் ஆவியே இனிக்கும்*
*-சின்னஞ்சிறு*

அமைதி

*பிறந்த நாளைத் தெரிந்து சொல்ல எவருமே இல்லை - வயது*
*பெருகப் பெருக அழகு இன்னும் குறையவே இல்லை*
*நிறைந்த செல்வம் வறுமை ஏற்றத்தாழ்வெனும் எல்லை*
*நினைத்திடாமல் இனிப்புடனே வழங்குவாள் சொல்லை*
*-சின்னஞ்சிறு*

*கன்னிப்பெண்ணாய் வாழ்ந்து பலகாவியம் வளர்த்தாள்-தன்*
*கற்பைக் காக்கப் புலவர்களைக் காவலாய் வைத்தாள்*
*எண்ணிஎண்ணிப் பின்னிய நூலாடை உடுத்தாள்*
*இன்பத் தமிழ்ப்பாவை நல்ல வாழ்வையே கொடுத்தாள்*
*-சின்னஞ்சிறு*

## பரவசக் கனவு

ராகம்: பாகேஸ்ரீ தாளம்: ஆதி

எடுப்பு

பைந்தமிழ்ச் சோலைதனைப் பரவசமாய்க் கனவில்
பார்த்ததை என்சொல்வேன் பாங்கிநீ கேளாய்
-பைந்தமிழ்

தொடுப்பு

நைந்துநைந்து பாடியதோர் ராமலிங்கக் குயில்
சந்தமுடன் ஆடியதே அருணகிரி மயில்
-பைந்தமிழ்

அமைதி

வள்ளுவனென்னும் கிள்ளை
வாய்மொழி உண்டேன்
வடிவழகாம் மணிமேகலை
மான் கண்டேன்
தள்ளாடும் அவ்வையாரைத்
தனித்தமிழால் விண்டேன்
தாயே! வணக்கமென்றேன்
தானே விழித்துக் கொண்டேன்
-பைந்தமிழ்த்

## முழங்கிடுவாய்!

*ராகம்: காபி* *தாளம்: ஆதி*

*எடுப்பு*

*அலைமோதும் கடலேநீ முழங்கிடுவாய்!-எங்கள்*
*அருமைத் தமிழ் நாட்டின் வழிவழி வரலாற்றை*
*-அலை*

*தொடுப்பு*

*தலைமுறையாய் செங்கோல்தாங்கிய வேந்தரெல்லாம்*
*நிலைகுலைந்தே மறைந்தார் நீயோ வளம் நிறைந்தாய்*
*-அலை*

*அமைதி*

*அகிலமெல்லாம் புகழும் அரும்பெருங் கலைஞரும்*
*அவ்வை பொய்யாமொழிபோல் அறநெறிக் கவிஞரும்*
*பகைவர் நடுநடுங்கும் படையணி வீரரும்*
*பரம்பரையாய் வாழ்ந்த தரமறிந்தாய் நீயே*
*-அலை*

## கலைச் செண்டு

ராகம்: சண்முகப்ரியா தாளம்: ஆதி

எடுப்பு

மலர் கொண்டு கலைச் செண்டு தொடுப்போம்-தோழி
மாத்தமிழ்ப் பொய்கையில் பாமணம் வீசிடும்
-மலர்

தொடுப்பு

விலைமதிக்க வொண்ணாச் சிலப்பதிகாரம்-அகம்
விரிந்தே முத்தமிழ்த்தேனைப் பொழிந்தே கமழ்ந்திடும்
-மலர்

அமைதி

இரட்டையர் கலம்பகப் பொருட்செறிவும்-அறம்
உரைத்த நம் அவ்வையின் பகுத்தறிவும்
அரசன் அதிவீரன் நைடதமும்-வெண்பா
அருளிய புகழேந்தி கவிநயமும் திகழும்
-மலர்

## கூவிடுவாய் குயிலே!

*ராகம்: கார்த்தியாயனி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*கூவிடுவாய்க் குயிலே!-இனிதாய்க்*
*குவலயமே மகிழச் சுவைமிகும் தனித்தமிழால்*
*-கூவிடுவாய்*

தொடுப்பு

*பூவினிலே நறுந்தேன் பொழிவதைப் போலே*
*புதுமை தனைத் தமிழே மொழிவதனாலே*
*-கூவிடுவாய்*

அமைதி

*தென்றலின் ஓசையிலும் தெளிந்த நீரோடையிலும்*
*கன்றின் அழைப்பினிலும் கடலின் குமுறலிலும்*
*குன்றாப் பசுமை நிறக் கிளியின் மொழியினிலும்*
*என்றும் தமிழிசையே இழைந்து முழங்குவதால்*
*-கூவிடுவாய்*

# மாலை மலரில் தமிழ்

ராகம்: காபி தாளம்: ஆதி

எடுப்பு

நீலவானில் பூத்த மாலைமலரில்-தமிழ்
நெடிலும் குறிலும் வரிவடிவாய்த் தெரியுதடீ!
-நீல

தொடுப்பு

கோலக்குயில் மொழியைக் கொஞ்சம் செவிசாய்த்தால்
குக்கூவெனும் தமிழே எக்காலும் கேட்குமடீ!
-நீல

அமைதி

ஆவினைக் கன்றழைக்கும் அமுதமொழியாது?
அம்மா! வெனும் தமிழே அதிலும் தப்பாது
தாவிடும் ஓடையதன் சலசலப் பேது?
சந்தத் தமிழன்றோ! விந்தையிதை ஓது
-நீல

## பூவாங்க வாரீர்!

ராகம்: கீரவாணி தாளம்: ஆதி

எடுப்பு

வையக மாந்தரெல்லாம் வாரீர்!-தமிழ்ப்
பொய்கையிலே மலர்ந்த புதுமணப் பூவாங்க
-வையக

தொடுப்பு

அய்யா! இதைநுகர அளிக்கும் விலையேது?
அறிவுப் பொருளிருந்தால் எவருக்குமே எளிது
-வையக

அமைதி

முதன் முதலாய்ப் புவியில் பதமாய் மலர்ந்தது
மொழிகளிலே அழகாய் தனிப்புகழ் அடைந்தது
உதிராமல் வாடாமல் புதுமையைக் கண்டது
உள்ளத்தில் சூடுதற்கே உயர்வினைக் கொண்டது
-வையக

## கொலுவிருந்தாள்!

ராகம்: வசந்தா தாளம்: ஆதி

எடுப்பு

உல்லாசமான கொலுவிருந்தாள்-உண்மை
எல்லைகண்ட எங்கள் இன்பத் தமிழன்னை
-உல்லாச

தொடுப்பு

பல்லாயிரம் மாந்தர் பரவசத்தால் ஆட,
பாவலர் நாவலர்கள் பண்கலந்தே பாட
-உல்லாச

அமைதி

மன்னாதி மன்னரெல்லாம் மண்டியிட்டே தொழவும்
பொன்னும் மணியை அவள் புகழில் செலவிடவும்
என்னவிந்தை யென்றே எங்கெங்கும் மகிழவும்
ஏழ்கடல் உலகெலாம் வீழ்ந்து பணியவும்
-உல்லாச

## இன்பத் தமிழிசை!

ராகம்: ஆபேரி தாளம்: ஆதி

எடுப்பு

எத்தனை மொழிகளில் இன்னிசை பாடினும்
என்னவோ இன்பத் தமிழிசை போலில்லை
-எத்தனை

தொடுப்பு

சித்தர்கள் வித்தகர் செப்பிய கவியில்
செந்தமிழொன்றே முந்தியதாம் புவியில்
-எத்தனை

அமைதி

சுருதியும் யாழும் குழைவதைப் போலே
சுகத்தினை அருளும் அகத்தில் தன்னாலே
கருதிய போதெல்லாம் பரிதியைப் போலே
கவலையைப் போக்கிடும் காரணத்தாலே
-எத்தனை

## தமிழ் மலர் ஆரம்

ராகம்: புலுசுமத்யமம் தாளம்: ஆதி

எடுப்பு

மணமுள்ள தமிழ்மலர் ஆரம்-கலை
வண்டுகள் அலைமோதி பாடுதே ரீங்காரம்
-மணமுள்ள

தொடுப்பு

இணையில்லாத பேரழகினையே காட்டும்
இனிமை இனிமை யென்றே அவனியே பாராட்டும்
-மணமுள்ள

அமைதி

அறிவொளியாம் திருவள்ளுவரும்-இளங்கோ
அடிகளுடன் வடலூர்ச் சுடரே போல்
நெறிதவறாப் புலவோர் நேர்மை வழிவகுத்த
நீதிமலர்ப் பொழிலில் ஆதிமுதல் தொகுத்த
-மணமுள்ள

## சங்கத் தமிழ்

ராகம்: காம்போதி தாளம்: ஆதி

எடுப்பு

சங்கத் தமிழ்ப்பாட்டினிலே பொங்குதே பேரின்பம்
தாராளமாய் பருக வாரீர்! வாரீர்!
-சங்க

தொடுப்பு

செங்கதிர்ச் சுடர்போலே சிந்தை மகிழ்ந்தாடத்
தேனருவி இன்பம் காணீர்!காணீர்!
-சங்க

அமைதி

பொன்மலர் மணம் கொண்ட புதுமையைப் போலே
பொருத்தமாய் உவமைகள் அமைவதினாலே
நன்மைதீமை காட்டும் வெண்பா வினாலே
நாடெல்லாம் கேடற்று வாழும் அன்பாலே
-சங்க

# மொழிச் சிறப்பு

ராகம்: நவரசமஞ்சரி தாளம்: ஆதி

எடுப்பு

அருந்தமிழில் தவழும் அமிழ்தெனும் சொல்லை
ஆயிரம் பாடினும் ஆசைதீர வில்லை
-அருந்தமிழில்

தொடுப்பு

பெரும்பொருள் காட்டும் பேரெழில் மூட்டும்
பேசும் பொழுதிலெல்லாம் நேசந்தனைக் கூட்டும்
-அருந்தமிழில்

அமைதி

வல்லபுலவரெல்லாம் வழங்கிய இம்மொழி
வாழ்வினில் வளத்தினை வகுத்திடும் செம்மொழி
நல்லதாயுமானாரின் நாவில் பதிந்த மொழி
நயமான கருத்துடன் நல்லிசை தரும்மொழி
-அருந்தமிழில்

## தமிழ் விருந்து

*ராகம்: அம்சத்வனி* *தாளம்: ரூபகம்*

எடுப்பு

*சிந்தை மகிழ் செந்தமிழ்போல்*
*எந்த மொழியில் இனிமைசொல்*
*-சிந்தை*

தொடுப்பு

*அந்த மிகும் சந்தமொடு*
*அருணகிரி திருப்புகழ் பார்!*
*-சிந்தை*

அமைதி

*கம்பன் உயர் காவியமும்*
*கருத்துநிறை திருக்குறளும்*
*அன்பொழுகும் அவ்வை சொல்லும்*
*அருந்தமிழின் விருந்தன்றோ*
*-சிந்தை*

## செந்தமிழ் மலர்!

*ராகம்: மோகனம்* *தாளம்: ஆதி*

எடுப்பு

*சிந்தனை அருவியால் செழித்த பொழில்தனிலே*
*செந்தமிழ் மலர்களே சிந்திக் கிடக்குதம்மா!*
*-சிந்தனை*

தொடுப்பு

*வந்தனை செய்திடவும் வாய்மை பெருகிடவும்*
*வல்லபுலவர் பலர் நல்லறத்தால் விளைந்த*
*-சிந்தனை*

அமைதி

*கலைமணம் கமழ்வதோ கணக்கிலடங்காது*
*காலமெனும் கனலில் ஞாலத்தில் வாடாது*
*நிலையான தமிழரின் நெஞ்சை விட்டகலாது*
*நீதியாம் நெறியினை ஓதிட உதவிடும்*
*-சிந்தனை*

# இன்ப வெள்ளம்!

*ராகம்: கானடா* *தாளம்: ஆதி*

எடுப்பு

*இன்பவெள்ளம் பெருகி துன்பம் கரைந்திடுமே!*
*எந்தமிழிசையினில் சிந்தை மிகுந்திடில்*
*-இன்ப*

தொடுப்பு

*அன்பெனும் வீணையிலே அமிழ்தெனும் இசை கூட்டி*
*அறிவாம் பெருவிருந்தை அள்ளி அள்ளித் தெளிக்கும்*
*-இன்ப*

அமைதி

*கற்கண்டு சீனியெலாம் கைத்திடுதே நாவில்*
*கவிதைமொழி இதிலே சுவை மிகுதே*
*சொற்களிலே புதுமை சொட்டிடுதே-கலை*
*துள்ளித் துள்ளி நடமாடிடுதே-எழில்*
*-இன்ப*

## தமிழ்க்கனி

ராகம்: சண்முகப்பிரியா தாளம்: ஆதி

எடுப்பு

கனியுண்டு கவிபாடிக் களித்திடுவோம்-அருட்
காவிய ஓடையில் நீராடிடுவோம்-தமிழ்க்
-கனி

தொடுப்பு

முனிவன் இளங்கோவும் மூதுரை அவ்வையும்
முற்றுணர்ந்தே நிதம் கற்றுச் சுவைத்த தமிழ்க்
-கனி

அமைதி

மொழிகளுக்கே முதன்மொழியாம்-தமிழ்
மூவேந்தர் முயற்சியால் கனிந்ததுவாம்
எழிலுடன் இசைத்தேனைப் பிழிந்திடுதாம்-இதை
எம்மதமும் சம்மதமாய் அருந்திடுதாம்-அன்பு
-கனி

## அழியா இன்பம்!

ராகம்: வசந்தா தாளம்: ரூபகம்

எடுப்பு

அழியா இன்பம் பொழிந்தாள்
அழகு தமிழ்த் தாய் என்றும்
-அழியா

தொடுப்பு

எழில்தரும் சீர்எதுகை மோனை
எல்லாம் கூடும் சொல்லால் பாடும்
-அழியா

அமைதி

அமிழ்தெனும் முத்தமிழை அள்ளி
அருந்திடும் நல்விருந்தளித்தாள்
கமழ்ந்திடுதே கலையின் மணம்
கன்னல்மொழி அன்னை சொல்லில்
-அழியா

## கன்னல் தமிழ்!

ராகம்: தேசிகத்தோடி தாளம்: ஆதி

எடுப்பு

செந்தமிழுன் மொழியெனச் சிறப்பு கொள்வாய்
செம்மையும் சீலமுமே செந்தேனொடு அமிழ்தாம்
-செந்தமிழ்

தொடுப்பு

எந்தமொழியிலுமே இந்த இனிமையில்லை
ஏடுகளைப் புரட்டிப் பாருமே இன்சொல்லை
-செந்தமிழ்

அமைதி

உலகமெல்லாம் புகழ் உன்னதச் செம்மொழி
ஊக்க மொன்றேதரும் உயிர்நாடியாம் மொழி
கலகமெல்லாம் களைந்து கனிவாய்த் தரும் மொழி
கானமுடன் சுவைத்தால் கன்னலாம் தேன்மொழி
-செந்தமிழ்

## ஆதித்தமிழ்!

ராகம்: பந்துவராளி தாளம்: மிஸ்ரஜம்பை

எடுப்பு

அகிலமெல்லாம் கூவி அழைத்திடுவாய் குயிலே!
ஆதித்தமிழ்மொழியை ஓதி மகிழ்ந்திடவே
-அகில

தொடுப்பு

பகைவரே ஆயினும் பரிந்துணவூட்டும்
பைந்தமிழ்த் தேனைப் பருகுவோம் வாருமென
-அகில

அமைதி

அறம்வளர்த்த தமிழ் அவ்வையின் நூலே
அய்ம்பெருங்காப்பியச் சொல்லழகும் மென்மேலே
திறம் விளங்கும் திருக்குறளின் முப்பாலே
திதிக்கத் திதிக்க நாமே அருந்துவதாலே
-அகில

## தமிழின் சாரம்!

*ராகம்: கானடா* *தாளம்: ஆதி*

எடுப்பு

வெண்ணிலவும் தாரகையும் விளையாடுதே! தமிழ்ப்
பண்ணிசைத்தால் எழிலாய்க் கண்சிமிட்டுதே! தோழி
-வெண்ணிலவும்

தொடுப்பு

கண்ணெதிரே காண்பதெல்லாம் காவியச் சோலை-அருட்
கவிகள் தொடுப்பதங்கே தமிழ்ப் பாமாலை
-வெண்ணிலவும்

அமைதி

பறவையின் நாதமெல்லாம் பைந்தமிழ்க் கீதம்-ஆழி
பரவசத் தொனியிலும் தமிழ் ஆரவாரம்
புறமும் அகமுமெல்லாம பொழிந்திடும் போதம்
புதிதல்லடீ இதுவே தமிழதின் சாரம்
-வெண்ணிலவும்

## பொன் மொழி

*ராகம்: பூர்விகல்யாணி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*பொன்மொழி அல்லவோ தென்மொழி நம்தமிழ்*
*புலமைத் திறமைக்கோர் புதுமை ஒளி அல்லவோ!*
-பொன்

தொடுப்பு

*நன்மை தீமையின் தன்மையைக் காட்டும்*
*நல்லநல்ல பொருளைச் சொல்லமுதாய் ஊட்டும்*
-பொன்

அமைதி

*இயல்இசை நாடகமெனும் பெரும்சாரம்*
*இழைந்து கலந்ததே இன்பத்தமிழ் ஆரம்*
*துயரினைப் போக்கிடும் தூய்மையே இதன் வீரம்*
*சூழ்கடல் உலகெல்லாம் சொல்லுதே ஆதாரம்*
-பொன்

## செந்தமிழ்த் தாய்!

ராகம்: கேதாரம் தாளம்: ஆதி

எடுப்பு

வந்தனை செய்தேன் செந்தமிழ்த்தாயே!
வாழி! வாழியென்றே ஏழிசை பாடி
-வந்தனை

தொடுப்பு

சிந்தனைச் செல்வம் கோடி தந்து சிறப்பித்தாய்
செம்மை தவழும் எந்தன் அம்மையே எந்நாளும்
-வந்தனை

அமைதி

கன்னலுடன் செந்நெல் பொன்னுடைத் தேவி
காரிகையுனைக் கலை மாமலர்தூவி
மன்னரும் மாந்தரும் மகிழ்ந்தனர் ஆவி
மாசில்லாமலே மனம் நேசித்தே கூவி
-வந்தனை

## ஆரவாரம் கேட்குது!

*ராகம்: அடாணா* *தாளம்: ஆதி*

எடுப்பு

ஆரவாரம் எங்கும் கேட்குதம்மா!
அருமைத் தமிழ்த்தாயுன்னைப் பெருமையுடன் பாடும்
-ஆரவாரம்

தொடுப்பு

வீரர்கள் பலரின் வெற்றிமுரசில் நீதி
வெல்க! வெல்கவென்றே வேகமுடன் எழும்
-ஆரவாரம்

அமைதி

நால்வகை வளமும் நாட்டும் உன் நாடு
நாவலர் பாவலர் நல்லருள் வீடு
சால்புடைக் கவிநிறைச் சங்கநூல் ஏடு
சந்ததமும் பாடும் சமரசத்தோடு
-ஆரவாரம்

## எல்லையில்லா இன்பம்!

ராகம்: சிம்மேந்திரமத்யமம் தாளம்: ஆதி

எடுப்பு

எல்லையில்லா இன்பம் அல்லவோடி-தமிழ்
இசையினில் பொருளும் இழைந்திடும் போதினில்
-எல்லை

தொடுப்பு

அல்லல் எல்லாம் மறந்து அருளொன்றே நினைந்து
அமிழ்தெனும் தமிழ்த்தேனை அள்ளி அள்ளிப் பருகில்
-எல்லை

அமைதி

சங்ககாலம் தந்த தனித்தமிழ் வளமும்
சத்திய பாரதியின் புத்துலகக் கருத்தும்
அங்கமெல்லாம் சிலிர்க்கும் அருங்குறள் வாக்கும்
அன்புடனே கேட்கில் துன்பமுடனே போக்கும்
-எல்லை

## அன்புத் தமிழ்!

ராகம்: பியாக் தாளம்: ஆதி

எடுப்பு

என்னென்று சொல்வேன் நண்பா
இன்பம் தவழும் நம் அன்புத் தமிழ்ப்பெருமை
-என்னென்று

தொடுப்பு

கன்னலெனும் மொழியைச் சொன்னவாயும் இனிக்கும்
கானத்தின் கற்பனையால் ஆனவோர் அற்புதத்தை
-என்னென்று

அமைதி

நாலடியார் புற நானூறின் சாரம்
நாவில் மொழிந்தாலே மேவுதோர் வீரம்
சாலச் சிறந்த பெரும் சகலகலை ஆரம்
சந்ததம் சூடிநிற்கும் எந்தமிழ்த்தாய்-தீரம்
-என்னென்று

## பதம் பாடுவோம்

ராகம்: காம்போதி தாளம்: கண்டசாபு

எடுப்பு

பாரெல்லாம் தமிழ்த்தாயின் பதம் பாடுவோம்
பண்ணமுதம்பருகி பரவசமாய் உருகி
-பாரெல்லாம்

தொடுப்பு

சீரான செந்தமிழ்ச் செல்வியைத் தினம் புகழ்ந்தே
செங்கதிரோன் உதயம்போல் எங்குமே மனம்மகிழ்ந்தே
-பாரெல்லாம்

அமைதி

இன்னல்களெல்லாம் தவிர்க்கும்
கன்னல்கவி பொழிவாள்
இன்பமலர் பூத்திடவே
அன்புடன் அருள்புரிவாள்
தன்னிகரில்லாக் கலையில்
தாரணியில் நிலைபெறுவாள்
தமிழே! உயிரெனவே
தலைநிமிர்ந்துலாவிடுவாள்
-பாரெல்லாம்

## அன்பு மாளிகை

ராகம்: மணிரங்கு தாளம்: ஆதி

எடுப்பு

அன்பு மாளிகையொன்றை அமைப்போம்-அதன்
அழகைத்தமிழ்க் கலையால் வளர்ப்போம்
-அன்பு

தொடுப்பு

இன்பம் இன்பமென்றே எங்கும் இசை முழங்க
துன்பம் தொலைந்ததென்றே தூய தமிழ் வழங்க
-அன்பு

அமைதி

ஆயிரம் ஆயிரம் நூலேடு-இவை
யாவும் அதில் விளங்கும் பொன்னேடு
தோயும் வனப்பாம் தமிழ்மலர்க்காடு-இதைச்
சுற்றிலும் வீசும் மணச்சிறப்போடு
-அன்பு

## எங்கள் தமிழ்

ராகம்: கானடா தாளம்: ரூபகம்

எடுப்பு

எங்கள் தமிழ்மொழியே!-எழில்
மங்கா வளர்மதியே
-எங்கள்

தொடுப்பு

சங்கமெனும் பெருங்கடலில்
தவழ்ந்த பெரும் காலப் பொருளே
-எங்கள்

அமைதி

வளமைமிகும் கவிபொழியும்
களங்கமில்லா அழகொளியே
இளமையென்னும் தளராமொழி
இன்பம் தரும் இசை அமுதே
-எங்கள்

## அருமை பெருமை!

ராகம்: சரஸ்வதி தாளம்: ஆதி

எடுப்பு

அருமை பெருமைகளை ஒருகணம் நினைத்தாலே
அங்கம் சிலிர்க்குதம்மா! எங்கள் தமிழ்த்தாயே-நின்
-அருமை

தொடுப்பு

கரம்தனில் முத்தமிழ்க் கனியினை ஏந்தியே
கல்வியெனும் சாற்றைச் சொல்விருந்தாய் பிழியும்
-அருமை

அமைதி

உலகமறை வகுத்த உத்தமன் வள்ளுவனும்
ஊரெல்லாம் புகழ்ந்திடும் வீரமரபினரும்
பலவகைப் பாட்டிசைக்கும் பாவலர் யாவருமே
பைந்தமிழ்தாயே நின் மைந்தர்கள் ஆனதினால்
-அருமை

## தொன்மைத் தமிழ்

ராகம்: பேகடா தாளம்: ஆதி

எடுப்பு

போற்றிப் புகழ்ந்திடுவோம்-எந்நாளும்
பொன்னானதமிழ்மொழியைக் கண்ணாகவே மதித்துப்
-போற்றி

தொடுப்பு

ஆற்றல் மிகும்கவிதை ஆயிரம் ஆயிரமாய்த்
தோற்றுவித்த நம் தொன்மைத் தமிழ்மொழியைப்
-போற்றி

அமைதி

ஆற்றுப் பெருக்கெனவே காவியமாம்-அதன்
அழகுத் திரைகளெனக் கலையழகாம்
வேற்றுமைகாணா நற்கருத்துடனே-இதயம்
வேண்டுமட்டும் நிதமும் பண் இசைத்தே
-போற்றி

## ஆழ்ந்த தமிழ் வளம்!

ராகம்: மோகனம் தாளம்: ஆதி

எடுப்பு

எதுவாயினும் தெவிட்டா அமுதமன்றோ-தமிழ்
ஏந்திழையாள் செல்வி ஈந்த கலைக் கல்வி
-எதுவாயினும்

தொடுப்பு

முதியோரும் இளையோரும் முனிவரும் கவிஞரும்
மூழ்கி மூழ்கித் திளைத்த ஆழ்ந்த தமிழ்வளம்
-எதுவாயினும்

அமைதி

எதுகையும் மோனையும் இணைந்தே விளையாட
எழில்மிகு காவியங்கள் அழகழகாய்க் கூட
புதுமையும் பழமையும் புணர்ந்தே மணம் நாட
இதுவல்லவோ மொழியின்பமென்றே பாட
-எதுவாயினும்

# தமிழ் அணங்கு

ராகம்: சாமா தாளம்: ஆதி

எடுப்பு

அன்புக் களஞ்சியமே! என் இன்பத் தமிழ் அணங்கே-உன்
அணைப்பினிலே மகிழும் அமுதம் நல்கிடுவாய்
-அன்பு

தொடுப்பு

துன்பமெல்லாம் மறந்தேன் உன்தூய தமிழ்நிறைந்தேன்
சொல்லுக்குச் சொல்லிசைத்தால் எந்தன் அல்லல்
மடியுதடீ -அன்பு

அமைதி

பாலும் தேனுமென்றே பெரும்பாவலர் பாடிடினும்-உன்
கோலத் தமிழ்கிணையே இந்த ஞாலத்தில் உண்டோடி
மாலைக்கதிரொளிபோல் நல்ல மலரழகினைப் போல்-என்
மனமெனும் மனையில்நீயே தினமும் வாழுகின்றாய்
-அன்பு

## கலைக்கோயில்!

*ராகம்: அரிகாம்போதி     தாளம்: சதுரஸ்ரஜாதி அடதாளம்*

எடுப்பு

*கலைக்கோவிலில் கொலுவிருந்தாள்-எங்கள்*
*கன்னல் தமிழ் அன்னை*
*கவிஞரும் கலைஞரும் தலைவணங்க - மணம்*
*கமழும் முத்தமிழ்*
*மலர்களைச் சூடியே     -கலைக்கோவில்*

தொடுப்பு

*அலை அலையாய் இசைஒலி முழங்க-அருளே*
*அதில் விளங்க*
*அகில உலகமெங்கும் புகழ் வழங்க*
*அழியாவளம் நிறை*
*மொழியாம் செந்தமிழ்க்     -கலைக்கோவில்*

அமைதி

*ஆயிரத்தினும் மேலாய் அமைந்த திருக்குறளால்*
*அழகுச் சுவரெழுப்பி*
*அறம்பொருளின்பமெனும் அறிவுஒளி வீசும்*
*முறையில் வழியமைத்து*
*தாயவள்மகிழவே வேந்தரும் புலவரும்*
*தூயசங்கம் நிறுவி*
*தாரணியில் தமிழே வாழ்கவென்றே இசைக்கும்*
*சமரசமிகுந்த*
*அமைதியில் எழுந்த     -கலைக்கோவில்*

## இவள் யார்?

ராகம்: ராகமாலிகை தாளம்: ஆதி

மாண்டு

வையகமே புகழும் பொய்யாமொழிக் குறளை
வாரிக்கொடுத்தவள் யார்?-எங்கள்
அய்யன் இளங்கோவும் அருள்மொழி அவ்வையும்
அடிபணிந்த தமிழ்த்தாய்!

ஜோன்புரி

கருணையே உருவான மணிவாசக முனிவன்
கவிதையில் மகிழ்ந்தவள் யார்?-சந்தம்
பெருகிடவே இசைத்த அருணகிரிப் புலவன்
புரிந்தநம் பழந்தமிழ்த்தாய்!

மோகனம்

தத்துவப் பேரொளியாம் தாயுமானார் வாக்கில்
தனிச்சுவை அளித்தவள் யார்?-வடலூர்
உத்தமராம் வள்ளல் உண்மைக் கருத்தினுக்கே
உதவிய செந்தமிழ்த்தாய்!

காபி

மூவேந்தரின் வீர சேவைதனைப் பாரில்
முரசொலி கொட்டியதார்?-அருட்
பாவலர் நாவலர் ஆவலுடன் பாடப்
பரிந்திடும் பைந்தமிழ்த்தாய்!

அடாணா

முத்தமிழாம் இயல்இசை நாடகமெனும்
மொழியில் தவழ்ந்தவள் யார்?-பதினெண்
சித்தரின் ஞானத்தே செந்தமிழ்த் தேனையே
சிந்திய நம் தமிழ்த்தாய்!

அம்சாநந்தி

கம்பனெனும் உயர்கற்பனை மலைதனில்
கவிமழை பொழிந்தவள் யார்?-இந்த
அம்புவியில் தமிழே அமிழ்தென நிலை நாட்டும்
ஆற்றல் மிகும் தமிழ்த்தாய்!

# இனிமைத் தமிழ்

ராகம்: சாருகேசி  தாளம்: ஆதி

எடுப்பு

பெருகிடுமே பேரின்பம்-தமிழிசை
அருவியில் ஒருமுறை அறிவுநீர் பருகினால்
-பெருகிடுமே

தொடுப்பு

உருகிடுமே கடின உள்ளமுமே நெகிழ்ந்து
உண்மை யொன்றே தமிழின் உயிரென்பதால் மகிழ்ந்து
-பெருகிடுமே

அமைதி

இனிமைக்கென்றே பிறந்த தனிமைத்தமிழ்மொழி
இதுவல்லவோ புனித இசைக்கு உகந்தமொழி
கனவை நனவாக்கும் கற்பனையால் வழி
காட்டிடும் கவிநடைச் சுவையுடைமொழியிதில்
-பெருகிடுமே

## அன்பரே வாரீர்

ராகம்: வாசஸ்பதி தாளம்: ஆதி

எடுப்பு

அன்னையின் புகழ்பாட அன்பரே வாரீர்!
அழகுதவழும் அவள் மொழியினைப் பாரீர்-தமிழ்
-அன்னை

தொடுப்பு

முன்னை மொழிக்கெல்லாம் முதன்மொழி தந்தவள்
தன்னிகரில்லாமல்தானாய் வளர்ந்தவள்
-அன்னை

அமைதி

புலவரும் வேந்தரும் பொதுமாந்தரும் கூடிப்
போற்றிப் பணிசெய்த நாட்களோ பலகோடி
நலமான சொற்களால் கலை ஆரம் சூடி
நம்முடன் வாழ்பவள் செம்மையைத் தேடி
-அன்னை

## சொல்ல எளிதல்ல!

ராகம்: வசந்தபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

சொல்ல எளிதல்லவே!-தமிழின்
எல்லை யில்லா எழிலை ஏட்டிலும் பாட்டிலும்
-சொல்ல

தொடுப்பு

இல்லையென்னும் பொருளே இல்லாத மொழியை
இணையில்லா உவமையால் உயர்வுதரும் வழியைச்
-சொல்ல

அமைதி

இளமையென்றும் குன்றா வளமையைக் கண்டது
இன்னிசையால் புலவோர் இன்னலை வென்றது
களத்தில் நெல்மணியெனக் கவிபலக் கொண்டது
காலத்தால் அழியாத கோலத்தில் நின்றது
-சொல்ல

## எங்கே கண்டாய்?

ராகம்: காமவர்த்தினி தாளம்: ஆதி

எடுப்பு

இத்தனை இன்பத்தை எங்கே கண்டாய்?-மொழி
எத்தனை கற்றாலும் இனிமைத் தமிழ் தரும்
-இத்தனை

தொடுப்பு

புத்தம் புதுமலரில் பொங்கிவரும் மணம்போல்
புலவரெல்லாம் புனைந்தபனுவல் அமைவதால்
-இத்தனை

அமைதி

நல்ல நல்ல கருத்தைச் சொல்லமுதாய்க் கூட்டும்
நாவெல்லாம் தேனூறும் காவியமே தீட்டும்
எல்லையில்லா வானாய் எழில்தனையே காட்டும்
எதுகையும் மோனையுமாய் இதயத்தில் மகிழ்வூட்டும்
-இத்தனை

## தமிழ் மலரே!

ராகம்: அம்சத்வனி தாளம்: ரூபகம்

எடுப்பு

பொங்கும் ஞானத் தேனைச் சிந்தும்
மங்கா எழில் தமிழ்மலரே!
-பொங்கும்

தொடுப்பு

அங்கம் சிலிர்க்க அகம்குளிர
அறிவைத் தேடும் புலவோர் பாடப்
-பொங்கும்

அமைதி

கன்னலும் கைக்கும் இன்னமுதாய்
கவிதைச் சூடும் கலையழகாய்
இன்னல்மடியும் இசைவடிவாய்
இணையில்லாத் தனிமொழியாய்ப்
-பொங்கும்

## தேன்மொழி!

*ராகம்: விஜயநாகரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*தேன்மொழி தென்மொழியே! செந்தமிழே!*
*சீருடன் பாடுவோர் நாவெல்லாம் அமுதே!*
*-தேன்*

தொடுப்பு

*வான்மழையால் உயிர் செழிப்பதைப் போலே*
*வண்ணக்கருத்தால் எண்ணம் இனிப்பதனாலே*
*-தேன்*

அமைதி

*காலப் பகைமையெல்லாம் களைந்தேஓடும்*
*காவல் மறந்தாலும் தானாய் நின்றாடும்*
*கோலமாய் இயல்இசை நாடகமே கூடும்*
*குன்றின் விளக்காய்க் கலைமன்றம் கொண்டாடும்*
*-தேன்*

# நெஞ்சம் இனிக்குது

ராகம்: சிம்மேந்திர மத்யமம் தாளம்: ஆதி

எடுப்பு

நினைத்தபோதே நெஞ்சம் இனிக்குதே
நிலையான புகழ்பெற்ற பழந்தமிழ்தாய் உனையே
-நினைத்த

தொடுப்பு

இணையில்லாத பேரிலக்கியச் சோலையிலே
ஈடில்லாக் கவிஞராம் உன்மைந்தர் உலாவுவதை
-நினைத்த

அமைதி

வந்தவரெல்லாம் செந்தமிழால் செழித்தே
சிந்தை மயங்கிநின்ற சேதியைஎன் சொல்வேன்
செந்தேனாய் அமுதாய்த் தித்திக்கும் கனியாய்த்
தெளிந்த இசையாலுன்னை வழிபடவே
-நினைத்த

## பைந்தமிழ்ப் பனுவல்

ராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

எடுப்பு

பாடிப்பாடிச் சுவைத்தால் பரவசமே!
பைந்தமிழ்ப் பனுவலே கனிரசமே!
-பாடிப்

தொடுப்பு

தேடித்தேடிக் குழையும் சேயும் தாயும்
சேர்ந்து மகிழ்வதெனச் செந்தமிழால் நாளும்
-பாடிப்

அமைதி

ஊற்றுப் பெருக்கெனவே உள்ளமே துள்ள
உவமையோ அமுதமாய்க் கருத்தை அள்ள
ஏற்றமிகும் இசையால் மயக்கம் தள்ள
இலக்கியம் கவிநயம் அனைத்தும் கொள்ளப்
-பாடிப்

## அறிவுக் கடல்!

ராகம்: காம்போதி தாளம்: ஆதி

எடுப்பு

ஆசைபிறந்ததால் அண்டுகிறேன் தாயே!
அமிழ்தெனும் தமிழ்தரும் அறிவுக்கடல் நீயே!
-ஆசை

தொடுப்பு

காசும் பொருளும் பொல்லாக் கயவருள்ளம் உண்டு
காலத்தால் அழியாவுன் கனிமொழியைக் கண்டு
-ஆசை

அமைதி

பாரின் பலமொழியைப் பயின்றாரும் உனைப்பாடும்
பாவலர் உள்ளமும் நாவெல்லாம் தேனோடும்
தேரின் புரவியெனச் சிந்தனை விரைந்தோடும்
தெவிட்டாத முத்தமிழ்ச் சுவைத்தே மகிழ்ந்தாடும்
-ஆசை

## அமுதமழை

ராகம்: இந்தோளம் தாளம்: ஆதி

எடுப்பு

இமையும் விழியுமென அமையும் தமிழிசையில்
எத்தனை இன்பம் பாரீர்!
-இமையும்

தொடுப்பு

அமுதமழைபொழிய அறிவுத்தேன் வழிய
அள்ளிப் பருகினாலே உள்ளமெல்லாம் தெளிய
-இமையும்

அமைதி

கவலை இருளோடி கருணை ஒளிகூடக்
கற்பனைத் தென்றலால் கலைமலரே ஆட,
சுவைக்கச் சுவைக்க வாழ்வு தூய மணம்நாடச்
சொல்லுக்குச் சொல்லின்பம் எல்லையின்றித் தேட
-இமையும்

## இசையாலே புகழ்!

ராகம்: வலஜி தாளம்: ஆதி

எடுப்பு

இசையாலே புகழ்கேட்டால் இதயம் மகிழுதே
இன்பத்தமிழ்த் தாயுன் பண்பனைத்தும் பாடும்
-இசை

தொடுப்பு

அசையாத உள்ளமும் அனல்மெழுகாயுருகும்
அருவியின் வெள்ளமாய்ப் பரவசமே பெருகும்
-இசை

அமைதி

பட்டதுயரமெல்லாம் பஞ்செனவே பறக்கும்
பகலவன் ஒளியென அகம்புறமும் சிரிக்கும்
எட்டாத கற்பனைகள் என்னென்னவோ பிறக்கும்
இல்லையென்ற கருத்தே இல்லாமலே சிறக்கும்
-இசை

## நமது தாய்நாடு!

ராகம்: இந்தோளம் தாளம்: ஆதி

எடுப்பு

நமதுதாய் நாடு அமுதத் தமிழ்நாடு
நல்லிசையால் இதன் வல்லமையைப் பாடு
-நமது

தொடுப்பு

அமைதியும் வீரமும் ஆம்பலும் தாமரைபோல்
அடுத்தடுத்தே மலர்ந்த அறிவுத் தடாகமன்றோ
-நமது

அமைதி

நன்றியும் வாய்மையும் என்றும் மறந்ததில்லை
நாவலர் பாவலர் எந்நாளுமே குறைந்ததில்லை
குன்றாத முத்தமிழ்மன்றமே இதன் எல்லை
குவலயத்தில் இதுபோல் எவருமே கண்டதில்லை
-நமது

## பொன்னி நாடு!

ராகம்: பீம்ப்ளாஸ் தாளம்: ஆதி

எடுப்பு

செந்நெல் வயல் சூழ்ந்திருக்கும் பொன்னிவளம் நாடு
கன்னித்தமிழால் புகழை இன்னிசையால் பாடு
-செந்நெல்

தொடுப்பு

மன்னர் மூவேந்தருள்ளே தன்னிகரில்லாச் சோழன்
இன்னமுதாய்த் தமிழை அள்ளி அள்ளிச் சுவைத்த
-செந்நெல்

அமைதி

கரும்பும் வாழையும் கமுகும் தலை யசைக்கக்
கனிதரும் மரங்களே காய்த்துக் குலுங்கி நிற்க
விரும்பும் பறவையினம் விண்ணிலே பண்ணிசைக்க
வெள்ளப் பெருக்கெனவே வீரர் அணிவகுக்க
-செந்நெல்

# பொருளடக்கம்

## உண்மைக்குத் திரை

*ராகம்: அடாணா* *தாளம்: ஆதி*

*எடுப்பு*

*உண்மைக்குத் திரைபோட ஒருநாளும் முடியாதே*
*ஓயாமல் பொய்சொல்லி வாழ்நாளில் மடியாதே*
*-உண்மை*

*தொடுப்பு*

*வெண்மைச் சுடர் முன்னே இருள் நில்லாதே*
*வெல்லத்தைக் கசப்பாக்கச் சொல்லால் ஆகாதே*
*-உண்மை*

*அமைதி*

*கற்றுத் தெளிந்ததேபோல் கதையளக்காதே*
*காலம் பதில் கூறும் மானம் இழக்காதே*
*வெற்றி உனதெனவே வீண்வாதம் பிடிக்காதே*
*வெட்கித் தலைகுனிவாய் எக்காலும் மறக்காதே*
*-உண்மை*

## தன்னலமே குறி

ராகம்: தர்பார் தாளம்: ஆதி

எடுப்பு

புத்தகமே சுமந்து எத்தனைதான் கற்றாய்?
புத்தி திருந்தாமல் பொதுநலம் கருதாமல்
-புத்தகமே

தொடுப்பு

தத்துவம் பலநூறு ஆராய்வாய்
தன்னலமே குறியாய் எந்நாளுமே அலைவாய்
-புத்தகமே

அமைதி

எத்தனையோ மேற்கோள் எடுத்து நீ காட்டுவாய்
இலக்கணம் கலைவளம் பலப்பல நீட்டுவாய்
உத்தமச் செயல்போலே ஊரை ஏமாற்றுவாய்
உண்மைதனை மறைத்துப் பொய்நிலை நாட்டுவாய்
-புத்தகமே

# தேடி ஓடாதே

ராகம்: தன்யாசி                                                       தாளம்: ஆதி

எடுப்பு

தேடித் தேடி ஓடாதே-புகழ்
தேடிவரும் வரை வாடாதே
-தேடி

தொடுப்பு

மூடிவைத்தாலுமே முத்தொளி போகுமோ
முழுதும் முயன்றாலும் இரும்பு பொன்னாகுமோ
-தேடி

அமைதி

ஆற்றலை மறைக்க யாராலும் முடியாது
அகந்தையால் புகழ்வேண்டில் ஒருக்காலும் விடியாது
தோற்றத்தால் கானல்நீர் தாகம் தணியாது
தூய்மையும் வாய்மையும் நேர்மையாய் அணியாது
-தேடி

## அறிவைக் காப்பாற்று

ராகம்: குந்தலவராளி தாளம்: ஆதி

எடுப்பு

காப்பாற்ற முடியாதய்யா-வாழ்வில்
காசொன்றே குறியாய் ஆசைகொண்டால் அறிவைக்
-காப்பாற்ற

தொடுப்பு

தீப்பந்தின் நடுவே பூப்பந்து வாடாதோ
சின்னத் தனத்தின் முன் கண்ணியம் ஓடாதோ
-காப்பாற்ற

அமைதி

சூறாவளியெனும் பேராசைக் குணமே
சுழன்றடித்தால் அமைதி அழிந்திடும் கணமே
மாறாத நேர்மையால் மாந்தரின் மனமே
மலைவிளக்காய்த் துலங்கும் அறிந்திடு தினமே

## பணம்! பணம்!

*ராகம்: செஞ்சுருட்டி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*வெள்ளி மீனில்லாத வானம் மினுக்காது*
*வெள்ளிப் பணம் இல்லா வாழ்வு இனிக்காது*
*துள்ளித்துள்ளி ஆடினாலும் மெல்லிசையைப் பாடினாலும்*
*சில்லறை யில்லாமே ஒண்ணும் நடக்காது-இங்கே*
*சில்லறையில்லாமே ஒண்ணும் நடக்காது*
*-வெள்ளி*

தொடுப்பு

*கல்லு முள்ளுப் பாதையிலே உன்னைத் தள்ளும்-பல*
*தில்லுமுல்லு வேலைகளைச் செய்யச் சொல்லும்*
*கண்ணை மறைக்கும் காதை அடைக்கும்*
*கள்ளபுத்திக் காரனுக்குக் காவலிருக்கும் -வெள்ளி*

அமைதி

*மலரிலே தேனிருக்கு மணமிருக்கு*
*கனியிலே நாவினிக்கும் ருசியிருக்கு*
*மானிடனே! உன்னிடத்தில் என்ன இருக்கு?*
*மனமிருக்கு அறிவிருக்கு-அது*
*பணத்துக்கு முன்னாலே வெறும் சரக்கு*
*பணத்துக்கு முன்னாலே வெறும் சரக்கு -வெள்ளி*

## பணத்தின் பயன்!

ராகம்: சிந்துபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

பசிதீர்க்க உதவாத பணத்தால் பயன்யாது?
பரந்த கடலெனினும் அருந்தும் நீரேது?
-பசி

தொடுப்பு

கசிந்து கசிந்துத் துன்பக் கண்ணீரால் நனைந்து
கையிலே ஓடேந்தும் கதியற்ற வறியோரின்
-பசி

அமைதி

அம்மா!அம்மா! யென்றே அழுதிடும் குழந்தையும்
அலறித் துடிதுடித்தே கலங்கும் மனைவியும்
கைம்மாறு கருதாமல் உழைக்கும் கணவனும்
கந்தல் உடையுடுத்தி நொந்து மடியும் போதில்
-பசி

## உள்ளமெனும் நிலம்

ராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

எடுப்பு

உள்ளமெனும் நிலத்தை உழுதிடுவோம்-அதிலே
உண்மையெனும் விதையைத் தூவிடுவோம்
-உள்ளம்

தொடுப்பு

கள்ளமெனும் கறையை நீக்கிடுவோம்-பலரைக்
கவரும் எழில்வனமாய் ஆக்கிடுவோம்
-உள்ளம்

அமைதி

அகந்தையெனும் மிருகம் பயந்தேஓட
அன்பெனும் குயிலினம் அழகுடன் பாட
நகைக்கும் புது மலரின் நறுமணம் கூட
ஞானக்கனிக்குலையே தானாய் அசைந்தாட
-உள்ளம்

## சுற்றுது பார்!

ராகம்: குந்தலவராளி தாளம்: ஆதி

எடுப்பு

சுற்றுது சுற்றுது பார்!-உலகம்
பற்பல திக்கினிலே பணமெனும் அச்சினிலே
-சுற்றுது

தொடுப்பு

கற்றவரும் இதிலே கதிகலங்கித் தயங்க
கடையரைப் போல் மதியை அடகுவைத்தே மயங்க
-சுற்றுது

அமைதி

அன்பென்பார் அருளென்பார்
அரனென்பார் அரியென்பார்
அல்லாவென்றே கூறி
நல்லவர் போல் நடிப்பார்
பொன்பொருள் வந்தாலே
அன்பை யெல்லாம் மறப்பார்
புவியில் எனக்கு நிகர்
எவரெனவே உரைப்பார்
-சுற்றுது

## நாட்டின் பகைவர்

ராகம்: கேதாரகவுளை தாளம்: ஆதி

எடுப்பு

பாடுபடாதவர் எவரோ-அவரே
நாடு சீரழிந்திட நாடும் பகைவரே
-பாடு

தொடுப்பு

காடுகளைத் திருத்திக் கழனிகளாய் வளர்த்து
கைத்தொழில் ஒன்றினைக் கருத்தினிலே நிறுத்திப்
-பாடு

அமைதி

சாலையிலும் தொழிற் சாலையிலும் உழைத்து
தாவர விளைச்சல்கள் யாவையுமே வளர்த்து
காலைமுதல்மாலை கணக்கு வகை திருத்தி
காவிய ஓவியமாய்க் கலை வாழ்வை உயர்த்திப்
-பாடு

## உயர்ந்த மனம்

ராகம்: வராளி தாளம்: ஆதி

எடுப்பு

உயர்ந்த மனத்தினால் உயர்ந்திடுவோம்
உண்மைதரும் கல்விஉருக்கமுடன் கற்றே
-உயர்ந்த

தொடுப்பு

பயன்தராக் களவுபொய்க் கயமைதனை வென்று
பண்புநிறைந்த மெய்யன் பொன்றிலே நின்று
-உயர்ந்த

அமைதி

அறமும் ஈகையும் அகத்தினிலே நிறுத்தி
அகந்தைச் செயலினை அற்பமென ஒதுக்கி
நிறைகுடமாய் நினைப்பில் நீதியொன்றே செலுத்தி
'நீ' நான் என்றபெரும் வேற்றுமையை வெறுத்து
-உயர்ந்த

## மனம் தளராதே

ராகம்: தன்யாசி　　　　தாளம்: ஆதி

எடுப்பு

தாழ்வு வந்த தென மனம் தளராதே
சஞ்சலப் பிணியுன்னை மிஞ்சவிடாதே
-தாழ்வு

தொடுப்பு

ஆழ்கடல் சூழுலகில் அறிந்திடப் பலவுண்டு
ஆன்றோரின் வாழ்வெல்லாம் அனுபவமாய்க் கண்டும்
-தாழ்வு

அமைதி

பாரெல்லாம் புகழ்ந்திடும் வீரரும் தீரரும்
பனுவல் பலப்பல புனைந்திட்ட புலவரும்
ஆறாத் துயரடைந்த அல்லலெல்லாம் காணில்
அந்தோ! உன் துயரம் எந்தமூலை வீணில்
-தாழ்வு

## அன்புக் கதவு

ராகம்: கானடா தாளம்: ஆதி

எடுப்பு

அன்புக் கதவை அடைக்காதே!
துன்பம் வந்தால் பின்பு துடிக்காதே!
-அன்பு

தொடுப்பு

இன்பக்கலை விளக்கை ஏற்றிடுவாய்
எல்லோரும் சமமெனப் போற்றிடுவாய்
-அன்பு

அமைதி

குழந்தையைக் கோபத்தால் அடிக்காதே-உன்
குறையெல்லாம் அதன்முன்னே படிக்காதே
உழைப்பவர் கூலியைப் பிடிக்காதே
உதட்டால் உறவாடிக் கெடுக்காதே
-அன்பு

# முன்னேற்றம் தேவை

ராகம்: பியாக் தாளம்: ஆதி

எடுப்பு

மனிதனாய் வாழ்ந்திட நினைந்திடுவாய்-நல்ல
மதியுடன் முன்னேற்றம் அடைந்திடுவாய்
-மனிதனாய்

தொடுப்பு

வினைப்பயனெனக் கூறி வீண்காலம் போக்காமல்
வெற்றிதரும் கலைகள் கற்றுணர்ந்தே சிறந்த
-மனிதனாய்

அமைதி

பலப்பல சாதிமதப் படுகுழி வீழாமல்
பகுத்தறிவை இழந்த பழக்கங்கள் நாடாமல்
வலையிலகப்பட்ட பறவையாய் மாறாமல்
வஞ்சகக் கதைகளை நம்பி ஏமாறாமல்
-மனிதனாய்

## கொஞ்சம் நினை

ராகம்: குந்தலவராளி தாளம்: ஆதி

எடுப்பு

கொஞ்சம் நினைக்கநேரம் பஞ்சமோ நெஞ்சே!-பணம்
கோடிவரினும் முன் வாடிநீ அலைந்ததைக்
-கொஞ்சம்

தொடுப்பு

வஞ்சக வண்டினங்கள் கொஞ்சிபுகழ்பாடும்
வளமை தளர்ந்து விடில் வந்தவழி ஓடும்
-கொஞ்சம்

அமைதி

அல்லல் பட்ட நாளில் ஆயிரம் நீதிபேசி
அற்பப் பொருள்கண்டால் அகந்தை ஏனோ யோசி?
நல்லவர் பெரியவர் சொல்லதையே வாசி
நலிந்தவர் உயர்ந்திடும் நல்வழியை நேசி
-கொஞ்சம்

## நெஞ்சம் வேகாதே

ராகம்: மாண்டு தாளம்: ஆதி

எடுப்பு

விதியை நினைந்து நெஞ்சம் வேகாதே(தலை)வாய்
வேதாந்தம் பேசி வீணாய்ச் சாகாதே
-விதியை

தொடுப்பு

புதுமையைக்காண அய்ம்புலன்களையும் உழுவாய்
பொன்னானதமிழ் விதைத்தே கன்னல் கவிமொழிவாய்
-விதியை

அமைதி

கல்விச் சுவை பொழியும் கனியுதிர் சோலை செய்வாய்
கல்லாத ஏழையரின் அல்லல்தனைக் களைவாய்
செல்வச் சிறப்பளிக்கும் சிந்தனைமலர் கொய்வாய்
சேர்ந்தே பணிபுரிந்தாராய்ந்தே மனம் மகிழ்வாய்
-விதியை

## கந்தல் ஆடை

ராகம்: சிந்துபைரவி தாளம்: ரூபகம்

எடுப்பு

கந்தல் ஆடையே-எங்கும்
காணும் அலங்கோலம் ஓங்குதே!
-கந்தல்

தொடுப்பு

சிந்தையை வாட்டுதே-பொருளே
செல்லுது வஞ்சகர் வீட்டில்
உழைப்பவர் நொந்திட நாட்டில்
-கந்தல்

அமைதி

தேயும் பிறையென ஏழைமாள
தேகம் வாடார் ஊரை ஆளும்
நோயைப் போக்கி வறியோர் மீளும்
நோக்கம் போற்றவே புரட்சி மூளும்
-கந்தல்

## வீண் பாராட்டு

*ராகம்: கரகரப்ரியா* *தாளம்: கண்டசாபு*

எடுப்பு

*பாராட்டைக் கண்டே நீ பரவசம் அடையாதே*
*பகுத்தறிவில் நின்றால் ஒரு துன்பம் கிடையாதே*
*-பாராட்டை*

தொடுப்பு

*சீராட்டிப் புகழ்வார் சிரம்மேலே கொள்வார்*
*செல்வம் இழந்தாலே சீச்சீயென்றே உமிழ்வார்*
*-பாராட்டை*

அமைதி

*உதட்டால் உறவாடும் சகவாசம் தள்ளு*
*உள்ளன்பைப் புரிந்து உயிர் நட்பாய்க் கொள்ளு;*
*அதட்டி மிரட்டினாலும் அறவழியே நில்லு*
*யாருக்கும் அடிமையென்றெண்ணாமல் முன் செல்லு*
*-பாராட்டை*

## இசையின் பெருமை

*ராகம்: தேஷ்* *தாளம்: ஆதி*

*எடுப்பு*

*மயங்காதவர் எவரே?-இசையினில்*
*மதுவுண்ட வண்டினம் போல் இதயமெல்லாம்*
*மகிழ்ந்தே*
*-மயங்காதவர்*

*தொடுப்பு*

*உயர்வையும் தாழ்வையும் மனம் மறந்தே*
*உயிரினம் யாவும் பரவசம் மிகுந்தே*
*-மயங்காதவர்!*

*அமைதி*

*தாயின் இசையமுதால் சேயுறங்கும்-கன்று*
*வேய்ங்குழலைக் கேட்டே மேய்ந்திடவும் தயங்கும்*
*ஓயாக் கவலைகளும் ஓய்ந்தொடுங்கும்-*
*உள்ளமெல்லாம் இன்ப வெள்ளமொன்றே முழங்கும்*
*-மயங்காதவர்*

## களங்கம் ஏனோ?

ராகம்: சாரங்கா தாளம்: ஆதி

எடுப்பு

நிலவினிலே காணும் களங்கமும் ஏனோ?
நேர்மையிலே தீமை சேர்வது தானோ!
-நிலவினிலே

தொடுப்பு

கலைஞருள்ளே வறுமை நிலவுவதேனோ?-மெய்க்
கருத்தினுக்கே நாட்டில் தரித்திரம் தானோ!
-நிலவினிலே

அமைதி

கர்மயோகி காந்தி துர்மரணம் ஏனோ?
காய்த்த மரத்தினுக்கே கல்லடிதானோ!
தர்மம் நிலையில்லாத் தன்மையிங் கேனோ?
சலனநிலையில் புவிசுழல்வது தானோ!
-நிலவினிலே

## உண்மைக்கு உயர்வு!

*ராகம்: பந்துவராளி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*உயர்வுண்டு தாழ்வில்லை மனமே!*
*உலகினில் என்றுமே நிலையான உண்மைக்கோர்*
*-உயர்வுண்டு*

தொடுப்பு

முயன்றே செயல்புரிந்தால் இயலாத தொன்றுண்டோ?
மூதறிஞர் மொழியில் ஏதேனும் பழுதுண்டோ?
-உயர்வுண்டு

அமைதி

வஞ்சகத்தால் வாழ்வு வளமை கண்டாலும்
வாடும் மலரெனவே நாளில் மறைந்தோடும்
நஞ்சுகலந்தமுது நாவில் இனித்தாலும்
நாழிகையில் உயிரே பாழாக வழிதேடும்
-உயர்வுண்டு

## வீண் பெருமை!

ராகம்: சக்ரவாகம் தாளம்: சதுஸ்ரஜாதி அடதாளம்

எடுப்பு

உனது பெருமைசொல்லி மமதை கொள்ளாதே
உல்கைச் சற்றேனும்
உற்றுப் பார்த்தே கல்வி கற்றுண ராமல்
உயர்ந்தவன் நானெனில்
பயன்தருமோ வீணில் -உனது

தொடுப்பு

மனது குளிர்ந்திடும் கனிவு மொழியோடு
அமைதியின் புகழ்பாடு
மடமையெல்லாம் நாளில் மடிந்திடுமே கேளு
மகிழ்வைக் கெடுத்திடும்
இகழ்வைக் கொடுத்திடும் -உனது

அமைதி

சத்தியமும் தயையும் சகல கலையழகும்
சார்ந்திடும் வழிதேடு
சஞ்சல மென்னும் நஞ்சை நெஞ்சைவிட்டே அகற்றும்
சமரசப் பண்பாடு
முத்துக் குளிப்பதென முயற்சி தளராமெய்
புத்திதனை நாடு
இத்தரையில் இதையே எடுத்துரைத்தார் பெரியோர்
எனவே அன்போடு
இனிமையில் கூடு -உனது

## யாருக்குபதேசம்?

ராகம்: விஜயநாகரி தாளம்: ஆதி

எடுப்பு

யாருக் குபதேசம் கூறுகின்றாய்?
சீரான கல்வியின்றிச் சிந்தனைச் செல்வமின்றி
-யாருக்கு

தொடுப்பு

தீராப் பெரும் நோயால் சிக்கி உழல்பவன்
ஊருக்கெல்லாம் புதுமருத்துவம் செய்வதேபோல்
-யாருக்கு

அமைதி

அன்பால் விளைந்திடும் பண்பறியாது
அறிவால் சிறந்திடும் முறையறியாது
தன்பலத்தின் தன்மை தானறியாது
என்போல் எவருண்டு என்பதால் பலனேது?
-யாருக்கு

## மதி மயங்காதே!

ராகம்: பாகேஶ்ரீ தாளம்: ஆதி

எடுப்பு

மடமையெனும் புயலில் மதிமயங்காதே!
கடமைதனை மறந்தே கருத்தழியாதே!
-மடமை

தொடுப்பு

நடமாடும் உருவாய் நாளைக்கழிக்காதே
நானெனும் அகந்தையால் ஊரை அழிக்காதே
-மடமை

அமைதி

அரிதான பெருந்தொண்டு புரிந்தாலன்றோ சீலம்
அல்லாமல் வாழ்நாளில் ஏதுண்டு அனுகூலம்
உருகிஉருகியழும் வறியோரின் அலங்கோலம்
உடன் களைந்தவர்க்கே தலைவணங்கும் ஞாலம்
-மடமை

## ஒற்றுமையின் உயர்வு!

ராகம்: மோகனம் தாளம்: ஆதி

எடுப்பு

சற்றே உணர்ந்திடுவாய்-உலகில்
ஒற்றுமையின் உயர்வைக் கற்றறிந்தே மனமே
-சற்றே

தொடுப்பு

உற்றுநோக்கில் பகையால் வெற்றியேதும் உண்டோ?
உருவான அமைதியினை எவரேனும் கண்டதுண்டோ?
-சற்றே

அமைதி

காகம் கலந்துண்ணும் காட்சியின் அருமையும்
கடுகெனும் சிற்றெறும்பின் ஒற்றுமைத் திறமையும்
யூகமாய்க் கூடமைக்கும் தேனீயின் பெருமையும்
உயர்ந்த மனிதனென்போன் சுயநலச் சிறுமையும்
-சற்றே

## வீணரைப் புகழாதே

ராகம்: ஹம்சாநந்தி தாளம்: ஆதி

எடுப்பு

வீணரெல்லாம் புகழ்ந்தே வாழ்நாளில் மகிழாதே
காணாத பொருளெல்லாம் கண்டதாய் உளறாதே
-வீணர்

தொடுப்பு

ஆணவம் தலைக்கேறி அனுதினம் நிலைமாறி
அமைதியைக் குலைத்திடும் மமதையில் களித்திடும்
-வீணர்

அமைதி

பொருள்படைத் தோரென்னும் பெருமையல்லாது
போற்றி வணங்கும் அறிவாற்றல் இவர்க்கேது?
அருளென நெகிழ்வதெல்லாம் அபிநயம் அல்லாது
அம்மம்மா! இவர் வாழ்வில் செம்மை நெறிஏது?
-வீணர்

## உள்ளம் தளர்ந்திடாதே

ராகம்: ரஞ்சனி தாளம்: ஆதி

எடுப்பு

உள்ளம் தளர்ந்திடாதே-ஒருநாளுமுன்
உறுதி குலைந்திடாதே-ஓயாமல் உன்
-உள்ளம்

தொடுப்பு

கள்ளங்கபடமில்லா நல்ல மனத்தவர்க்கே
கரம் குவிப்பதல்லால் தரமறியாரிடத்தே
-உள்ளம்

அமைதி

காசுபணம் குவிந்தால் காலைப் பிடித்திடுவார்
கையில்பொருள் குறைந்தால் கண்டபடி இகழ்வார்
பாசம் மிகுந்தவர் போல் பரிவுடனே குழைவார்
பாரில் இவர் உறவால் யாரே நலம் பெறுவார்
-உள்ளம்

## பணமே கதி!

*ராகம்: சிந்துபைரவி* *தாளம்: ஆதி*

*எடுப்பு*

*காலமெல்லாம் பணமே கதியெனவே நினைந்தால்*
*கருத்தினிலே உண்மை உதித்திடுமோ! மனமே*
*-காலமெல்லாம்*

*தொடுப்பு*

*சீலமிகுந்தவர் போலே சித்தாந்தத்தின் பெயராலே*
*சேவையெனக் கூறி தேவைக்கதிகம் நாடி*
*-காலமெல்லாம்*

*அமைதி*

*பொதுநலத்தொண்டரென நிதம் நடிப்பார்-அதில்*
*புகழும் தன்னலமுமே கடைபிடிப்பார்*
*அதுவிதுவெனப் பல கதை படிப்பார்-முடிவில்*
*அகப்பட்டதைச் சுருட்டி வழி நடப்பார்*
*-காலமெல்லாம்*

## கண் விழிப்போம்!

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

எடுப்பு

எதிர்காலம் இனிதே கண்விழித்திடுவோம்
எல்லோரும் ஒன்றாக உழைத்திடுவோம்
-எதிர்காலம்

தொடுப்பு

விதிவென்று மதியால் முன்னேறிடுவோம்
வெற்றி நமதெனவே கூறிடுவோம்
-எதிர்காலம்

அமைதி

புதுப்புதுத் தொழில்முறை தேடிவளர்ப்போம்
புன்செய் நன்செய் விளைச்சல் அள்ளிக் குவிப்போம்
மதவெறி இனவெறி மாய நினைப்போம்
மழைபெய்த பொழில்போல வாழ்வை அமைப்போம்
-எதிர்காலம்

## நலமான தொண்டு

*ராகம்: சுத்த சாவேரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*என்ன தொண்டு புரிந்தாய்?-வாழ்வில்*
*உன்னை ஈன்றவுன் அன்னை தந்தை மகிழ*
*-என்ன*

தொடுப்பு

பொன்னும் பொருளுமே புகழென மகிழாது
பொதுநலமே கருதி இதுவரையில் அறிதாய்
-என்ன

அமைதி

பெற்று வளர்த்துக் கல்விகற்றுக் கொடுத்தவர்க்குப்
பெருமையொன்றைத் தேடித் தருவதன்றோ உயர்வு
குற்றம் புரிந்து மானம் விற்றவனாய்த் திரிந்து
குலத்தை யழிக்காமல் நலந்தனையே தெரிந்து
-என்ன

## காலத்தின் அருமை!

*ராகம்: கானடா* *தாளம்: ஆதி*

எடுப்பு

காலத்தை வீணாய்க் கழிக்காதே-மனமே!
கடமையை மறந்தே மடமை யினால் தினமே
-காலத்தை

தொடுப்பு

நீலத்திரைக்கடல் குமிழியைப் போலே
நிமிடத்தில் மாய்ந்திடும் உயிரென்பதாலே
-காலத்தை

அமைதி

இயற்கையில் வயதே நூறெனினும்-இதில்
இளமையும் முதுமையும் தூக்கமும் கழியும்
செயற்கையில் ஏதேதோ பிணியுமே விளையும்
தெளிவடையும் செயலே அரிதல்லவோ இனியும்
-காலத்தை

## ஏழை முகம் பார்

*ராகம்: விஜயநாகரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*தன்னலமே பெரிதென்றெண்ணாதே-இதனால்*
*தாழ்வு பலவுண்டு வாழ்வைப் பாழ் பண்ணாதே*
*-தன்னலமே*

தொடுப்பு

*இன்னலால் வாடும் ஏழைமுகம் பாரு*
*இதுவல்லவோ உமது ஈகையின் சீரு*
*-தன்னலமே*

அமைதி

*வையக உயிரெல்லாம் வாழப் பிறந்ததல்லால்*
*வருந்தி வருந்தி மனம் குலைந்திடவோ சொல்வாய்*
*பொய்யும் பொறாமை சூழ் புகழிலே மகிழ்கின்றாய்*
*போக்கற்றவரை ஏனோ ஏற்க நீ மறுக்கின்றாய்*
*-தன்னலமே*

## கலை வணக்கம்

*ராகம்: சங்கராபரணம்* *தாளம்: ஆதி*

எடுப்பு

*கலைவணக்கம் செய்வோம்-அருங்*
*கருத்துடன் ஏழிசை வகுத்தவனைப் புகழ்வோம்*
*-கலை*

தொடுப்பு

*அலைகடல் முத்ததனை அள்ளிக் கொடுத்ததென*
*அறிவு விருந்தளித்த பெரியவனைப் போற்றிக்*
*-கலை*

அமைதி

*சாதனையால் ஒலியைச் சலித்தெடுத்தான் (அரிய) அதனைச்*
*சரிகமபதநி என இசைத்தான்*
*நூதனமாய்க்கலைக்கோர் உயிர் கொடுத்தான்-அவன்*
*நுண்ணறிவின் திறனை எண்ணியே நாம் அனைவரும்*
*-கலை*

# ஆராய்ந்து பார்

*ராகம்: நாதநாமக்ரியா* *தாளம்: ஆதி*

எடுப்பு

*ஆராய்ந்து பார் மனிதா-உலகில்*
*அன்பினால் கனிந்திடும் இன்பத்தை எந்நாளும்*
*-ஆராய்ந்து*

தொடுப்பு

*ஓராயிரம் குறைகள் பாரில் நிறைந்திடினும்*
*உண்மையால் நடந்திடும் நன்மையைத் திடமுடன்*
*-ஆராய்ந்து*

அமைதி

*காசுபணம் பெற்றுக் களிப்படைந்தாலும்*
*கண்டவர் கைகூப்பித் தெண்டனிட்டாலும்*
*பேசியே மேடைகளில் பெருமை பெற்றாலும்*
*பிறர் நலம் கருதிடும் முறையால் எக்காலும்*
*-ஆராய்ந்து*

## உள்ளமெனும் கோவில்

*ராகம்: பிலஹரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*வெள்ளம்போல் பேரின்பம் பெருகிடுமே நெஞ்சே!*
*வேதனை உனக்கினி ஏதுமில்லை அஞ்சேல்*
-வெள்ளம்

தொடுப்பு

*கள்ளமில்லா நினைவே உள்ளமெனும் கோவில்*
*கல்வியின் சாரமிதைச் சொல்வாய் நீ பூவில்*
-வெள்ளம்

அமைதி

*நல்ல மனதுடைய நண்பரை நாடு*
*நாளில் சில நேரம் தனிமையைத் தேடு*
*இல்லா தோர் இருப்போர் வேற்றுமைக்கோடு*
*இல்லாமலே அழிக்கும் முயற்சியில் பாடு*
-வெள்ளம்

## இன்பவனம்!

ராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

இன்பவனம் ஒன்றுளது எல்லோரும் வாருங்கள்
ஏற்றமுடன் பயிரிட்ட எழிலையே பாருங்கள்
-இன்ப

தொடுப்பு

அன்பெனும் விதைதூவி அருளெனும் நீர் சொரிந்தே
ஆணவக் களையெடுத்து ஆனந்தப் பூச்செறிந்த
-இன்ப

அமைதி

நீதியாம் மலர்ப்பொழிலில் நிறைந்திடும் தேனையுண்டு
நித்தம் ரீங்காரமிடும் நேர்மையெனும் பொன்வண்டு
சாதிமத வேலியில்லை சமத்துவ ஓடையுண்டு
சாந்தமாய் நீராட சத்தியம் நெஞ்சில்கொண்டு
-இன்ப

## மெய்யான பூசை

*ராகம்: சரஸ்வதி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*கையினால் செய்திடும் பொய்யான பூசையால்*
*கற்பனைக் கடவுளைக் காணவோர் ஆசையா?*
*-கையினால்*

தொடுப்பு

*மெய்யான பூசையொன்றை மேதினியில் தேடாமல்*
*மெலிந்தவர் நலிந்தவர் நலன்களை நாடாமல்*
*-கையினால்*

அமைதி

*வஞ்சகம் களவினை நெஞ்சைவிட் டோட்டி*
*வாய்மையினால் தவழும் தூய்மைதனைக் கூட்டி*
*அஞ்சாமை நேர்மை அகத்தினில் சூட்டி*
*அற்பரையே பாடாமல் கற்பூரம் காட்டி*
*-கையினால்*

# குவலய நீதி

ராகம்: கரகரப்ரியா தாளம்: ஆதி

எடுப்பு

குறைசொல்வதே குறியாய்க் கொள்ளாதே
குவலய நீதி ஓதும் குணமிதைத் தள்ளாதே
-குறை

தொடுப்பு

மறவாமல் குறள்சொல்லும் மாண்பினைப் பாரு
மதியுடன் வாழ்ந்திட இது நல்ல சீரு
-குறை

அமைதி

உன்னை அறியாமல் பிறர்தன்னைப் பழிபேசி
உல்லாசமாய்த்திரிந்தால் பொல்லாமை தான் யோசி
அன்னையைப் போல் அவ்வை அருளியதோர் ஆசி
அமுதத் தமிழினிலே அத்தனையும் வாசி
-குறை

## யார் பெரியவர்?

*ராகம்: சண்முகப்ரியா* *தாளம்: ஆதி*

எடுப்பு

*தாழ்ந்தவர் என்பவர் தரணியில் எவரே?*
*தற்பெருமை கொள்ளும் அற்பர்கள் அவரே*
*-தாழ்ந்தவர்*

தொடுப்பு

*சூழ்ந்திடும் வளமுடன் வாழ்ந்திடுவார் எனினும்*
*சொல்லையும் செயலையும் மாற்றி மாற்றி மகிழ்வார்*
*-தாழ்ந்தவர்*

அமைதி

*கட்டத்துணியின்றிக் கையேந்தி நின்றாலும்*
*கவலையும் பிணியுமே கனத்துச் சிதைத்தாலும்*
*எட்டி விலகெனும் சொல்கொட்டி வதைத்தாலும்*
*இதயம் புனிதமெனில் இவரே பெரியவராம்*
*-தாழ்ந்தவர்*

# அலைந்து கெடாதே

ராகம்: பிலஹரி தாளம்: ரூபகம்

எடுப்பு

அற்ப சுகத்திற் காசைப்படாதே
அறிவு குலைந்து அலைந்து கெடாதே
-அற்ப

தொடுப்பு

நற்சகவாசம் நீ மறவாதே
நல்லவரின் மனம் நடுங்கவிடாதே
-அற்ப

அமைதி

அன்பால் உலகாளப்பாரு
அனுபவமிதை அவசியம் கேளு
தன்மானமே உயிரென நாடு
தன்னலமில்லா உயர்வினைத் தேடு
-அற்ப

## சமத்துவ மகத்துவம்

ராகம்: மோகனம் தாளம்: ஆதி

எடுப்பு

வாருங்கள் ஒன்று சேருங்கள்-இன்ப
வாழ்வை வகுத்திடுவோம்
தாழ்வைப்பகைத்திடுவோம் -வாருங்கள்

தொடுப்பு

பாரினில் சாதிமதப் போரினை மறந்து
பளிங்கெனும் அகத்தினில் பகுத்தறிவே நிறைந்து
-வாருங்கள்

அமைதி

வறுமையால் கோடிகோடி வாடி வதங்கிட
வாட்டமின்றிப் பலர் வளமாய் மகிழ்ந்திட;
சிறுமையாம் இந்நிலை சிதைந்து மடிந்திடச்
சீருடன் சமத்துவ மகத்துவம் அடைந்திட
-வாருங்கள்

## ஓங்குக! ஓங்குகவே!

*ராகம்: மத்யமாவதி* *தாளம்: ஆதி*

*எடுப்பு*

*ஓங்குக! ஓங்குகவே!-கலை*
*உயர்வுடன் செல்வமும் பல்வகைத் தொழிலும்*
*செழித்து -ஓங்குக*

*தொடுப்பு*

*ஏங்கி மெலிந்திடும் ஏழை எளியவர்*
*இன்னல்கள் மறைந்து இன்பமே தழைத்து*
*-ஓங்குக*

*அமைதி*

*சாதிமதபேத வாதமெல்லாம் தீர்ந்து*
*சமரசமே அனைவர் மனத்தினிலும் சார்ந்து*
*மேதினியில் வாழும் நீதியை ஆராய்ந்து*
*மெய்ஞ்ஞானமே தோய்ந்து அஞ்ஞானமே மாய்ந்து*
*-ஓங்குக*

## தளராதே!

ராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

எடுப்பு

வாழ்வினில் உயர்பவன் நீயன்றோ
தாழ்வொன்றையே நினைத்துத் தளர்வது நன்றோ
-வாழ்வினில்

தொடுப்பு

ஊழ்வினை யெனக்கூறி ஊரில் அலையாமல்
உண்மை மறந்தே உன்தன்மை குலையாமல்
-வாழ்வினில்

அமைதி

கருத்தினிலே சிறந்தோர் சரித்திரம் பாரு
கடும்உழைப்பாலன்றோ அடைந்தார் நற்பேறு
பொருத்த மின்றிக்கண்ணீர் பொழிவதென்ன சீரு
புவியில் நீ உயர்ந்திட நீ தானே வேறாரு?
-வாழ்வினில்

## நிந்தனை ஏன்?

ராகம்: பூர்விகல்யாணி தாளம்: ஆதி

எடுப்பு

இந்தப் புத்தி ஏனுனக்கு விந்தைமனமே!-தினமும்
ஏதாகிலும் பலரை இகழ்ந்தே மகிழ்ந்துலவும்
-இந்த

தொடுப்பு

நிந்தனை செய்வதெனில் சிந்தனைக்கே எளிது
நீதியைப் போற்றுவதே மேதினியில் பெரிது
-இந்த

அமைதி

களவு பொறாமையெனும் கயமையை நீக்கு
கனிவுமொழியாலே இனிமை யுண்டாக்கு
வளமை சேர் நேர்மையே வாழ்வின் நற்போக்கு
வாய்வம்பு பேசாமல் நீயே இதை நோக்கு
-இந்த

## சத்திய வழி

ராகம்: மோகனம் தாளம்: ஆதி

எடுப்பு

சத்தியவழி நடப்போம்-இன்பச்
சமரசம் கடைப்பிடிப்போம்
-சத்திய

தொடுப்பு

புத்தம் புதிய கல்வித்திட்டமெல்லாம் வகுப்போம்
பூவின் மணம்போலே யாவருமே களிப்போம்
-சத்திய

அமைதி

நல்லமனம் படைத்தோர் நாட்டினில் கண்டாலே
நம்மவர் என்றழைத்தே செம்மைப் பணிபுரிவோம்
வல்லவரெனக் கூறி வாது வழக்காடும்
வம்பர்களின் உறவால் இன்பமுண்டோ என்றும்
-சத்திய

## தாயின் பெருமை!

ராகம்: தேஷ் தாளம்: ரூபகம்

எடுப்பு

கண்கண்ட தெய்வமடா!
கருணை அன்னை உருவமடா!
-கண்

தொடுப்பு

மண்மேல் நம்வாழ்வு தந்த
பெண்வடிவப் பெருமையடா!
-கண்

அமைதி

தன் சுகத்தைத் தான் கருதாள்
தனயனுக்கே இனிமை செய்வாள்
பொன்படைத்த புகழெனவே
புத்திரரால் அகமகிழ்வாள்
-கண்

## தன்னல மனிதா!

ராகம்: பேகடா தாளம்: ஆதி

எடுப்பு

என்ன சுகமடைவாய் தன்னல மனிதா?-நீ
ஏழை எளியவரின் வாழ்வையெல்லாம் பறித்து
-என்ன

தொடுப்பு

பொன்னும் புகழிலே உன்பெயர் நிலையாது - அய்ம்
புலன்களின் சம்மதமாய் நலன் ஏதும் செய்யாது
-என்ன

அமைதி

இன்பமும் துன்பமும் உன் இதயம் உணர்வதேபோல்
எவரிடத்தும் உள்ளம் இரங்குவதே மிகமேல்
என்புருக உழைப்பார் ஏரில் எருதினைப் போல்
இவரல்லவோ வாழ்வின் உயிர்நாடியாம் புவிமேல்
-என்ன

## சல்லாபம் கொள்ளாதே!

ராகம்: சாமா தாளம்: ஆதி

எடுப்பு

சல்லாபம் கொள்ளாதே நீ-வீண்
சஞ்சலமே வளர்க்கும் வஞ்சகரின் உறவில்
-சல்லாபம்

தொடுப்பு

பொல்லாமை தீமை எல்லாமே உள்ளடக்கிப்
புனிதரைப்போல் நடிக்கும் மனிதரில் கொடியோரின்
-சல்லாபம்

அமைதி

காட்டு விலங்கினமும் கூட்டுறவில் உலவும்
கயவர்களின் கருத்தில் சுயநலமே நிலவும்
போட்டிப் பொறாமையினால் பொருள் குவிப்பார்-யாவும்
பூரணன் அருளென்றே மார்தட்டுவார்-இவரின்
-சல்லாபம்

## சிந்தனை செய்!

ராகம்: கானடா தாளம்: ஆதி

எடுப்பு

சிந்தனைசெய் மனமே-வீண்
நிந்தனை ஏன் தினமே
-சிந்தனை

தொடுப்பு

விந்தை நிறைப் புவியில் வாழ்வு
வெற்றிபெறக் கற்றுணர்ந்து
-சிந்தனை

அமைதி

பொன்பொருளில் புரண்டாலும்-பொய்ப்
புகழில் அகம் மலர்ந்தாலும்
அம்புவியில் அறிவே மேலாம்
அழியாப் பெருஞ்செல்வம் போலாம்
-சிந்தனை

## புதுமை இதுதானா?

ராகம்: தன்யாசி தாளம்: ஆதி

எடுப்பு

புதுமை இதுதானா அம்மா?-இந்தப்
பூதலவாழ்வினில் காணும் காட்சி யாவும்
-புதுமை

தொடுப்பு

நிதம் நிதம் ஆயிரம் நீதிகள் கூத்தாடும்
நீர்மேல் எழுத்தெனவே ஓர் நொடியில் ஓடும்
-புதுமை

அமைதி

கல்லாய் மனம் படைத்தோர் கனவானாய் வாழுகிறார்
கருணையுருவானோர் கவலையால் சோருகிறார்
நல்லபுலவர் பலர் நாளெல்லாம் வாடுகிறார்
ஞானமில்லாதவரோ நானென ஆடுகிறார்
-புதுமை

## கரம் குவிப்பாய்!

*ராகம்: கரகரப்ரியா* *தாளம்: ஆதி*

எடுப்பு

*கரம் குவிப்பாய் மனமே!-வாழ்வினில்*
*கண்ணிய சீலராம் புண்ணியர்கள் அவர்க்கே*
*-கரம்*

தொடுப்பு

*பரம்பரைச் செல்வரென்றே பணிந்து வீழாமல்*
*பகுத்தறிவால் நிறைந்த பாங்குடையோர்க்கே*
*-கரம்*

அமைதி

*கற்றவரென்பதெல்லாம் கனத்த உடையிலில்லை*
*காணும் அணிமணிகள் மின்னும் அழகிலில்லை*
*குற்றம் களைந்துலகில் குணமொன்றே கருதி*
*குவலயத்தே தொண்டு புரிபவர்க்கே என்றும்*
*-கரம்*

## நல்ல தொண்டு

*ராகம்: பிலஹரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*நல்லதொண்டு புரிவோம் அல்லல்தனைக் களைவோம்*
*நானெனும் அறியாமை இல்லாமல் இணைவோம்*
*-நல்ல*

தொடுப்பு

*தொல்லைதனில் பிறந்து துயர்தனிலே வளர்ந்த*
*இல்லாத ஏழைபலர் செல்வநிலை பெறவே*
*-நல்ல*

அமைதி

*அடுத்தகணத்திலென்ன ஆகுமோவெனக் குன்றி*
*அய்யா! அம்மா! வென்றே கையேந்தியே நின்று*
*உடுத்த உடையின்றி உண்ணவோ சோறின்றி*
*உயிருடன் மன்றாடும் இவர்க்கே செய்வோம் நன்றி*
*-நல்ல*

## அன்றே சுகம்!

ராகம்:பெஹாக் தாளம்: ஆதி

எடுப்பு

அன்றே சுகம் பெறுவாய் வாழ்வில் நீ
அகந்தையின் உறவை மறந்திடும் நாளென்றோ
-அன்றே

தொடுப்பு

நன்றல்லவே அந்தோ! நானெனும் எண்ணம்
நயவுரை மொழிந்தாலே பயனடைவது திண்ணம்
-அன்றே

அமைதி

அறிவான நூலனைத்தும் அறிந்திருந்தாலும்
அளவில்லாப் பொருளாலே சிறந்திருந்தாலும்
நெறிதவறும் மமதை நிலையா தென்னாளும்
நீயே இதை நாளும் ஆராய்வதே சாலும்
-அன்றே

## நல்ல வழி

ராகம்: திலங் தாளம்: ஆதி

எடுப்பு

நல்லவழி சொல்லுவாய்-நண்பா!
நாட்டினிலே எவர்க்கும் பாட்டின்மூலம் சுவைக்கும்
-நல்ல

தொடுப்பு

தொல்லைதனைத் தவிர்க்கும் சுகம்தனையே குவிக்கும்
தூயசன்மார்க்க சங்க நேயரெல்லாம் இசைக்கும்
-நல்ல

அமைதி

காசு பணத்திற்கென்றே கருத்தழியாமல்
கலையின் பெயராலே நிலை குலையாமல்
மாசுமிகும் வீண்மமதை கொள்ளாமல்
மாயமாம் காமத்தில் மாய்ந்து கெடாமல்
-நல்ல

## அமைதி நிலவுது!

ராகம்: வசந்தா  தாளம்: ரூபகம்

எடுப்பு

அமைதி நிலவுது பார்!-அன்பும்
அருளும் பொழியுது பார்!
-அமைதி

தொடுப்பு

சமயபேதப் பகை மறைந்தே
சமரசமே அகம் நிறைந்தே
-அமைதி

அமைதி

மனமெனும் இன்ப வனந்தனிலே
மதமெனும் புயல் வரத்தகுமோ!
அனைவரும் நாம் ஒரு குலமாய்
அணைந்தாலே நலம் மிகுந்தே
-அமைதி

## துன்பமுண்டோ!

ராகம்: நடபைரவி                    தாளம்: ஆதி

எடுப்பு

ஏது குறை சொல்லடீ!- இம்மேதினியில்
எங்கெங்குமே அன்பு பொங்கிப் பொழிந்தாலே
-ஏதுகுறை

தொடுப்பு

வேதனையே தரும் சாதிமதப் போரில்
நீதியுண்டோவென்றே
நினைத்தோமென்றால் - பாரில்
-ஏதுகுறை

அமைதி

புதுமை மிகும் தொழில்கள்
விதம்விதமாய் ஓங்கி
பொருள்வளம் யாவர்க்கும்
பொதுவெனும் புகழ்தாங்கி
இதயமெல்லாம் நன்மை
உதயமொன்றே தேங்கி
இன்பம் கொண்டால் வாழ்வில்
துன்பமுண்டோ பாங்கி
-ஏதுகுறை

## வருந்தாதே!

ராகம்: அடாணா தாளம்: ஆதி

எடுப்பு

ஏதும் வருந்திடாதே-எந்நாளும் நீ
எடுத்த முயற்சியினில் எளிதில் தளர்ந்திடாதே
-ஏதும்

தொடுப்பு

பூதலவாழ்வே ஓர் பெரும் போராட்டம்
புத்தியுடன் உழைத்தால் உண்டோ திண்டாட்டம்
-ஏதும்

அமைதி

மாயவுலகமென்றே வாயளவில் பேசி
வஞ்சக வம்பளந்தால் இன்பமுண்டோயோசி?
ஆயகலைகள் தொழில் அனைத்தையுமே நேசி
அன்றே நலம் பெறுவாய் நன்றாய் ஆலோசி
-ஏதும்

## தன்னல நாடகம்

ராகம்: பிலஹரி தாளம்: ஆதி

எடுப்பு

மனமே நீ மயங்காதே-உலகில்
மாந்தர்தம் நலனுக்காய் ஆடும் நாடகம் கண்டே
-மனமே

தொடுப்பு

கனவிலும் நனவிலும் உன்கடமை மறவாதே
காலப் புயலில் சிக்கி ஓலமிட்டுருகாதே
-மனமே

அமைதி

தீமைக் கடைப்பிடிப்போர் பேருயர்ந்தாலும்
சிறுமைக்குணம் படைத்தோர் பெருமை பெற்றாலும்
காமமொன்றே நினைந்தோர் களிப்பே கண்டாலும்
காலப் போக்கில் தெரியும் சீலமொன்றே சாலும்
-மனமே

## எளியவர் வாழ்வு

ராகம்: சிந்துபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

எளியவர் வாழவே இசைப்போம் ஓர் பாட்டு
இதற்கல்லவோ என்றும் நிலைக்கும் பாராட்டு
-எளியவர்

தொடுப்பு

களைத்துக் களைத்து அந்தோ! கண்ணீர் வழிந்தோடும்
கால் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் திண்டாடும்
-எளியவர்

அமைதி

உணவும் உடையுமவர் உழைப்பின் நற்சாட்சி
உதிரமெனக் கொட்டும் வியர்வையே அத்தாட்சி
பணமும் பகட்டுமாய்ப் பார்க்கும் காட்சி-கரையான்
பாடுபடப்பாம்பு குடியேறும் ஆட்சி
-எளியவர்

# இசை விருந்து

ராகம் அம்சத்வனி தாளம்: ஆதி

எடுப்பு

இசைவிருந்தின் சுவையை அருந்திடுவோம்-தமிழ்
இனிமை மிகக் கலந்தே கலைமணமும் கமழும்
-இசை

தொடுப்பு

அசைந்தாடும் கடல் அலைகளென ஒலி
அற்புத நடமிடும் கற்பனையும் தவழும்
-இசை

அமைதி

கனியினிலே சாறு இனிப்பதைப் போலே
கருத்தினிலே தமிழே சிறப்பதினாலே
பனிவிலகக் கதிரோன் உதிப்பதைப் போலே
பைந்தமிழால் மடமை பறப்பதினாலே
-இசை

## இதுவே வேண்டும்

விருத்தம்:

உலகமெலாம் உண்மைநெறி தழைக்க வேண்டும்
உழைப்பவர்க்கே உயர்வாழ்வு அளிக்க வேண்டும்
பலகதைகள் பொய்பேசும் பாரின் ஞானப்
பகட்டர்களைப் பதரெனவே அகற்ற வேண்டும்
நலம்தரும்நல் இசைதனிலே நாட்டம் கொண்டோர்
பலன்தரும் நம் பைந்தமிழே பாட வேண்டும்
விலைகூறிப் பகுத்தறிவை விற்கும் வீணர்
வேண்டும்தன் னலமொன்றை வேண்டோம் யாமே!

அன்பென்றும் அருளென்றும் அந்தோ! நீதி
அறைகின்றார் அழைக்கின்றார் மாந்தர் தம்மை
என்பொன்றே உடல்காட்டி ஏங்கும் ஏழை
எளியவர்தம் நிலைகண்டே இரங்கக் காணோம்
முன்பவர்கள் செய்தவினை முளைத்த தென்றே
மொழிகின்றார் முனிகின்றார் முறைகள் செய்யார்
இன்பமொன்றே குறிக்கோளாய் வாழுமிந்த
ஈனர்களின் உறவினிலே ஏமா றோமே!

உயர்வென்றும் தாழ்வென்றும் வரையறுத்தே
உலகினிலே பலமான போரை மூட்டி
பயனில்லாச் சாதிமதப் பகைமை காட்டி
பகுத்தறிவைக் கொன்றனரே பாரீர்! அந்தோ
இயலிசை நாடகமென்னும் இதிலும் சார்ந்தே
எவ்விதமோ தெளித்தனரே இழிவாம் நஞ்சை
மயக்கமுற்ற மாந்தரெல்லாம் மகிழ்வே காணும்
வளமான வாழ்வையென்றும் வாழ்த்து வோமே!

# இசை அமுது

ராகம்: ராகமாலிகை தாளம்: ஆதி

வசந்தா

சிலையோ வென அமரச் சிந்தையெல்லாம் கவரக்
கலைமணம் தருவதெது?
ஒலிமயமாய் வந்து ஓயா இன்பம் தந்து
ஓங்கும் இசை அமுது!

-சிலையோ

அடாணா

சீறிடும் நாகமும் ஆடிப்படமெடுக்க
சிறந்த விருந்துமெது?
மாறாத பகையையும் மாற்றி வைத்தே-மனம்
மகிழும் இசை அமுது!

-சிலையோ

கானடா

வாசலில் வறியோரும் காசுபெறுவதற்கே
வசதியைத் தருவதெது?
பாசமுடன் தாயே சேயை உறங்க வைக்கப்
பாடும் இசையமுது!

-சிலையோ

பிலஹரி

பாடுபடுவோரே வேலைச் சுமை குறைய
பரவசம் பெறுவதெது?
மாடுடன் மானினம் மேய்வதையே மறந்து
மயங்கும் இசையமுது!

-சிலையோ

சாவேரி

தாவும் வரிப்புலியும் சாந்த நிலைபெறவோர்
தன்மையைக் கொடுப்பதெது?
கூவும் குயிலினமும் தேடும் இரைமறந்தே
கொஞ்சும் இசை அமுது!

-சிலையோ

சாமா

காதலர் அன்பினிலே மோகம் தனை மூட்டிக்
காந்தமாய் இழுப்பதெது?
பாதகம் புரிவோர்க்கும் பகுத்தறிவைக் காட்டும்
பண்பெனும் இசைஅமுது!

-சிலையோ

## அறிவு மன்றம்!

ராகம்: சுத்த தன்யாசி தாளம்: ஆதி

எடுப்பு

அறிவுமன்றம் காண அன்பரே வாரீர்!
அகந்தை மனம் நீக்கி அனைவரும் சேரீர்!
-அறிவு

தொடுப்பு

குறள்நெறியால் உயர்ந்த கொள்கை அமைப்போம்
குற்றமில்லாச் செயலால் இன்பம் வளர்ப்போம்
-அறிவு

அமைதி

நாடு மொழி உயர நல்லதிட்டம் தீட்டி
ஞாலமெல்லாம் புகழ வேற்றுமையை ஓட்டி
பாடுபடுவோர்க்கே பதவியைக் காட்டி
பகலவன் ஒளியெனச் சமரசம் நிலைநாட்டி
-அறிவு

## பகல் வேடம்

ராகம்: பிலஹரி தாளம்: ஆதி

எடுப்பு

வெளியே சொன்னால் வெட்கமய்யா!-பகல்
வேடக்காரர் மாடமாளிகை வாழ்வை
-வெளியே

தொடுப்பு

துளியும் நன்மை புரிந்தறியார்-உள்ளத்
தூய்மைத்தன்மை பொருள் அறியார்
-வெளியே

அமைதி

பல்லைக் காட்டிப் பணம் குவிப்பார்-பிறர்
பார்த்துப் புகழவே கொடை அளிப்பார்
சொல்லுக்கும் செயலுக்கும் தூர நிற்பார்-உண்மைத்
தொண்டென்றால் என்னவென்றே விழிப்பார்
-வெளியே

## வீண் பெருமை

ராகம்: வசந்தா

தாளம்: ஆதி

எடுப்பு

ஏனிந்த வீண்பெருமை-உலகில்
இன்பமுடன் வாழும் அன்பு வழியிருக்க
-ஏன்

தொடுப்பு

நானெனும் அகந்தையால் வாழ் நாளைப்போக்கி
நல்லநட்பையெல்லாம் பொல்லாமைக் காளாக்கி
-ஏன்

அமைதி

தேனிருக்க நஞ்சைத் தீண்டுதல் உண்டோ!
சிந்தையிலே செருக்கைத் தூண்டுதல் நன்றோ
மானிருக்கப் புலியை வளர்ப்பதும் உண்டோ
வஞ்சகத்தை நெஞ்சில் வளர்ப்பதும் நன்றோ
-ஏன்

## கலை உலகம்!

ராகம்: சாருமதி தாளம்: ஆதி

எடுப்பு

கலையை மதியாத உலகமய்யா! கையில்
காசில்லா ஏழை மேதையென்றாலும் அவர்
உண்மைக்
-கலை

தொடுப்பு

புலமை அரைகுறையாய் அறிந்தாலும்-பணம்
புழங்குதென்றால் புகழும் முழங்குதய்யா- உண்மைக்
-கலையை

அமைதி

அங்கமெல்லாம் தங்க நகையணிவார்-தலை
அசைத்து ரசிக்கப் பலபேரும் வருவார்
எங்கெங்கோ அழைத்துப் பட்டம் தருவார்-மலை
ஏற்றிவைத்த விளக்காய்ப் போற்றிப் புகழ்வார்-
உண்மைக் -கலையை

## கேளாத கதை

*ராகம்: பூர்விகல்யாணி* *தாளம்: ஆதி*

எடுப்பு

கேளாத கதையாகுதே-எங்கும்
நாளாக நாளாக நாட்டின் நடப்பெல்லாம்
-கேளாத

தொடுப்பு

மாளாத மதப்பகை பணப்பகை இனப்பகை
மாறி மாறி வதைத்தே வாழ்வைக் குலைப்பதெல்லாம்
-கேளாத

அமைதி

ஏழையைச் செல்வரெல்லாம் இரக்கமின்றி வாட்ட
இல்லாமையால் வறியோர் பொல்லாமையே காட்ட
கீழவர் மேலவராய் தீமை இருள் கூட்டக்
கெடுமதியால் புரியும் கொடுமைதனைக் கேட்கக்
-கேளாத

## பிறந்த பயன்

*ராகம்: கல்யாணி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*பிறந்ததெல்லாம் வாழ்வில் சிறந்திட அன்றோ*
*பிழைகள் செய்தே மனம் மகிழ்வது நன்றோ*
*-பிறந்த*

தொடுப்பு

*மறந்தும் நீ எவரையும் வருந்த விடாதே*
*மற்றவரை எந்நாளும் குற்றம் கூறாதே*
*-பிறந்த*

அமைதி

ஊருக்குழைப்பதே போல் உன்சுகம் நாடாதே
ஒன்றைவிட்டேஒன்றில் அன்றாடம் மாறாதே
பேரும் புகழ்கருதி பிறரைநீ இகழாதே
பெற்றதாய் நாட்டின் பெருமை மறவாதே
*-பிறந்த*

## கடமையை நடத்து

*ராகம்: கரகரப்பிரியா* *தாளம்: ஆதி*

எடுப்பு

*கடந்த வாழ்வை எண்ணிக் கவலைப்படாதே*
*கடமையை நடத்திட இனி மறவாதே*
*-கடந்த*

தொடுப்பு

*உடைந்தகுடத்தின் நீர் ஒன்று சேராது*
*உறக்கம் தனில் வரும் கனவு தேறாது*
*-கடந்த*

அமைதி

*முயற்சி தளராமல் முன்னேறிச் செல்லு*
*மூடமதியகற்றி கேடனைத்தும் வெல்லு*
*பயன்மிகுந்த கருத்தைப் பலரிடம் சொல்லு*
*பகுத்தறிவுப் பொழிலில் பரவசமாய் நில்லு*
*-கடந்த*

## கண்மூடி உலகம்

ராகம்: பாகேஸ்ரீ தாளம்: ரூபகம்

எடுப்பு

கண்மூடி உலகமடா!-நீதி
காணாமல் அழியுதடா!

-கண்

தொடுப்பு

உண்மைக்கே காலம் ஏது?-தீமை
ஒழிந்திட நாளும் ஏது?

-கண்

அமைதி

காசில்லா ஏழையென்றால் கைதியின் கதிதானோ
கயவனாய் வாழ்ந்தாலும் பணம் மறைப்பது ஏனோ?
ஈசனின் கோயிலிலும் இடிந்ததை மதியாரே
எளியவர் துயரத்தை ஒருதுளி அறியாரே

-கண்

## எழில் வாழ்வு!

*ராகம்: பிலஹரி* *தாளம்: ஆதி*

எடுப்பு

புதுமைக் கலைபோற்ற வருவாயே!
புவியில் எழில் வாழ்வு தருவாயே!
-புதுமை

தொடுப்பு

இதயவிளக்கேற்றி மகிழ்வாயே
இழிவுதரும் கேட்டை இகழ்வாயே
-புதுமை

அமைதி

தொழிலை மிகப்போற்றி வளர்த்தாலே
துயரமது போகும் உழைப்பாலே
மொழியை உயிராக்கும் பணியாலே
முழுமைபெறும் நாட்டை அடைவாயே
-புதுமை

## அன்பின் விளைவு

ராகம்: இந்தோளம் தாளம்: ஆதி

எடுப்பு

*அன்பினால் ஆகும் அதிசய விளைவே*
*ஆத்திரத்தால் ஆகுமோ கிளியே!*
*-அன்பினால்*

தொடுப்பு

*தன்பலத்தால் பலரைப் பணியவைத்தாலும்*
*இன்பம் நிலைத்திடுமோ எந்நாளும்*
*-அன்பினால்*

அமைதி

*அடித்துப் பழுக்கவைத்தால் காய் கனியாகுமோ*
*அரும்பை அலர்த்தியதால் நறுமணம் வீசுமோ*
*கடும்சொல்லின் வேகம் கருத்தைக் கவருமோ*
*கற்றோரின் உள்ளம் சற்றும் மகிழுமோ*
*-அன்பினால்*

## எது வேண்டும்?

*ராகம்: பியாக்* *தாளம்: ஆதி*

எடுப்பு

*நல்லதோர் வாழ்வு வேண்டும்-உலகில்*
*எல்லோரும் ஓர்குலமாய் இன்பமாய் வாழவேண்டும்*
*-நல்லதோர்*

தொடுப்பு

*சொல்லும் செயலும் ஒன்றாகும் துணிவைத் தேட வேண்டும்*
*சொந்த நலம் கருதும் பொய்வந்தனை மாற வேண்டும்*
*-நல்லதோர்*

*அமைதி*

*இல்லையென்ற சொல்லே எங்கும் இல்லாதிருக்க வேண்டும்*
*ஏழையைச் செல்வர் வாட்டும் இழிவுமாற வேண்டும்*
*இல்லறச் சோலையிலே கிளிபோல்*
*இணைந்து வாழ வேண்டும்*
*எங்கும் பொதுநெறியே பரவி*
*இனிமை காண வேண்டும்*
*-நல்லதோர்*

## குயில் பாட்டு!

ராகம்: கிளிக்கண்ணிமெட்டு தாளம்: ஆதி

எடுப்பு

கற்றவரெல்லாம் புகழும்
கன்னல் தமிழிசையால்
உற்றதைச் சொல்வாயடீ-குயிலே
உலகிற்கே நன்மையடீ -கற்ற

தொடுப்பு

எண்ணத்தில் உண்மை வேண்டும்
ஏழைமேல் அன்பு வேண்டும்
வண்ணமாய்ப் பேசிடவே-குயிலே
வார்த்தைக்கே பஞ்சமோடீ -கற்ற

நல்லசகுனமென்பார்
நாளும் கிழமையென்பார்
உள்ளத்தில் தெளியாரடீ-குயிலே
உழைப்பை வெறுப்பாரடீ -கற்ற

பட்டம் பதவிபெறப்
பாமரை ஏய்ப்பவரின்
கொட்டம் அடங்கிடவே-குயிலே
குரல் தூக்கிப் பாடிடுவாய் -கற்ற

சாத்திரம் பேசிடுவார்
சடங்குகள் செய்திடுவார்
கோத்திரம் போற்றிடுவார்-குயிலே
குணத்தை மறப்பாரடீ -கற்ற

உண்டென்றும் உருவென்றும்
உள்ளத்தில் உள்ளானென்றும்
கண்டபடி சொல்வதல்லால்-குயிலே
கடமையைச் செய்யாரடீ -கற்ற

## பொங்கல் திருநாள்

ராகம்: மணிரங்கு தாளம்: ஆதி

எடுப்பு

பொங்குது பேரின்பமே!-எங்குமே
புதுமை வளம்பெருக்கும் உழவனின் திறமையால்
-பொங்குது

தொடுப்பு

தங்கச் சிறுமணிகள் தரையில் குவிந்ததென
அங்கங்கே செந்நெல் அழகூட்டும் திருநாளில்
-பொங்குது

அமைதி

கன்னலுடன் பாகும் கனிரசமும் கூட்டிக்
கலந்தபுது அமுதைக் கதிரவன் முன்காட்டி
இன்னல் மடிகவென்றே ஏழிசை மலர் சூட்டி
எல்லோரும் மகிழ்ந்திடும் நல்வாழ்வைப் பாராட்டிப்
-பொங்குது

# பொருளடக்கம்

## அருட்பா!

ராகம்: கானடா                                                    தாளம்: ஆதி

எடுப்பு

அருட்பாவின் இசையே அமுதமழையே
அகந்தனிலே பொழிந்தால் அகலும் கவலையே
-அருட்பா

தொடுப்பு

இருட்டறையில் விளக்கை ஏற்றினாற்போலே
இதயக் குகையினுள்ளே ஒளிதரும் நூலே
-அருட்பா

அமைதி

தென்றல் நடையிலே செந்தமிழே ஆடும்
சிந்தனை ஊற்றோ செந்தேனாய் ஓடும்
அன்றலர்ந்த மலராய் அறிவுமணம் கூடும்
அன்பும் அமைதிபெற ஆர்வமுடன் பாடும்
-அருட்பா

## குறளமுதம்

ராகம்: வாசஸ்பதி தாளம்: ஆதி

எடுப்பு

இணையான நூலேதும் புவிமேலுண்டோ?
இலக்கிய ஏடுகண்ட புலவரெல்லாம் சொல்வீர்
-இணையான

தொடுப்பு

அணையா விளக்கினைப்போல் அறிவொளி வீசி
அறம்பொருள் இன்பம்தரும் திருக்குறளமுதம் போல்
-இணையான

அமைதி

பரவசத்தமிழிலே பாங்குடனே சிறந்து
படிப்போரின் சிந்தனையில் சுவைதரும் விருந்து
அரசியல் மேதைகட்கும் அதிசய மருந்து
அன்றாட வாழ்வினிலே ஒன்றாகவே பொருந்தும்
-இணையான

## கவி இன்பம்

ராகம்: தேஷ் தாளம்: ஆதி

எடுப்பு

எத்தனைதான் பொருள் இருந்திடினும்-கவியின்
இன்பம் ஏதோ தனிதான் புவியில்
-எத்தனை

தொடுப்பு

முத்தெனும் சொல்பதித்த மூதாட்டியின் குறளே*
மொழிந்திடில் மனத்தினில் வழிந்திடும் அருளே
-எத்தனை

அமைதி

வள்ளுவர் கொள்கையும் வடலூரார் வாய்மொழியும்
வாரிக் குடித்திடில் வாழ்வெலாம் தேன்பொழியும்
தெள்ளுதமிழ் முனிவன் இளங்கோவின் வழியும்
தெரிந்தாலே தீமையே திண்ணமாய் அழியும்
-எத்தனை

---

* அவ்வை மூதாட்டியின் ஞானக்குறள்

## கம்பன் புகழ்

ராகம் : பியாக் தாளம்: ஆதி

எடுப்பு

காவியத்தில் உயர்ந்த ஓவியம் தீட்டிய நம்
கம்பனைப்போ லொரு கவிஞனுண்டோ-தமிழ்க்
-காவியத்தில்

தொடுப்பு

தாவிடும் மானெனும் தனித்தமிழ் நடையில்
தவழும் கற்பனையுடன் கவிச்சுவை ததும்பும்
-காவியத்தில்

அமைதி

பாடப்பாடப் பெரும்பரவச மூட்டும்
பண்ணுடன் கலந்திடும் பதத்தினைக் கூட்டும்
மேடையில் கவிஞர்கள் மெய்த்திறன் நாட்டும்
மேதைக் கவியவரின் மேன்மையைக் காட்டும்
-காவியத்தில்

## முப்பால் கண்ட குறள்

ராகம்: மந்தாரி தாளம்: ஆதி

எடுப்பு

முப்பால் கண்ட குறளுக்கப்பால் ஓர் நூலுண்டோ
தப்போ இத்தனிப் பெருமை செப்பிடுவாய் மனமே
-முப்பால்

தொடுப்பு

ஒப்புயர்வில்லா உண்மை வழி இது
ஒருமுகமாயன்றி உலகினுக்கே பொது
-முப்பால்

அமைதி

காலம் கடந்த பெரும் சீலம் தனைக்கொண்டு
கருத்து மிகுந்திடும் கனிமொழி இதிலுண்டு
ஞாலத்தில் எம்மதமும் சம்மதமெனக் கண்டு
நனிசிறந்திடும் தனிச்சுவைதரும் கற்கண்டு
-முப்பால்

## குறளின்பம்!

*ராகம்: கன்னடகவுளை* *தாளம்: ஆதி*

எடுப்பு

*தீராத பேரின்பமே!-செந்தமிழ்த்*
*தேனைப் பிழிந்தெடுத்த திருக்குறள் அமுதமே*
*-தீராத*

தொடுப்பு

*பாரெங்கிலும் நிறைந்த பகுத்தறிவைத் திரட்டி*
*பண்புடன் தொகுத்த குறள் வெண்பாவதன் கருத்து*
*-தீராத*

அமைதி

*ஆறறிவால் அடைந்த ஆற்றலில் ஊற்றுண்டு*
*அரசியல் ஞானமும் அதிகம் இதிலுண்டு*
*நூறுபத்தும் முன்னூற்று முப்பதுமாய்த் திரண்டு*
*நுண்ணறி வுடையோர்க்கு எந்நாளும் கற்கண்டு*
*-தீராத*

## வாழ்வின் இலக்கணம்

*ராகம்: வர்த்தனி* *தாளம்: ஆதி*

எடுப்பு

*அதிசயம் அதிசயமே-அறிவே*
*ஆழ்ந்த திருக்குறளில் சூழ்ந்த கருத்தனைத்தும்*
*-அதிசயம்*

தொடுப்பு

*மதிநிறைந்தோர்க் கெல்லாம் புதுமை விருந்து*
*மடமை தவிர்க்கும் நல்ல நடைமுறை மருந்து*
*-அதிசயம்*

அமைதி

*வாழ்வின் இலக்கணமாய் வகுத்துத் தந்தார்-திரு*
*வள்ளுவப் பெருந்தகை யெனச் சிறந்தார்*
*தாழ்வுதரும் சிறுமைதகர்த் தெறிந்தார்-பெருந்*
*தன்மையே உலகெலாம் தழைக்க வந்தார்*
*-அதிசயம்*

## ஞானக் காட்சி!

ராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

ஞானக் காட்சி காணவருவீர்-அருளைத்
தேனெனத் திரட்டிய திருவருட்பாவிலே
-ஞானக்

தொடுப்பு

வானத்தின் ஜோதியென வந்துதித்தார்-அந்த
வள்ளல் அவரளித்த தெள்ளுதமிழிசையில்
-ஞானக்

அமைதி

ஆறுதிருமுறையாம் அறிவுமலர் வனமாம்
அதனுள் நுழைந்தவர்க்கே அழியா இன்பமணமாம்
மாறுபடும் உள்ள மயக்கம் தெளிந்திடுமாம்
மந்தமாருதம் வீசி சிந்தை குளிர்ந்திடுமாம்
-ஞானக்

## சிலம்போசை!

ராகம்: கமாஸ் தாளம்: ஆதி

எடுப்பு

சிலம்போசை கேட்குதம்மா!-எங்கும்
செந்தமிழ்க் கன்னியவள் விந்தையுடன் ஆடும்
-சிலம்போசை

தொடுப்பு

நலமுடனே முனிவன் இளங்கோவன் எழிலாய்
நாட்டினிலே படைத்த பாட்டினிலே கிடைத்த
-சிலம்போசை

அமைதி

கண்ணகியின் சிறந்த கற்பினைக் காட்டும்
காவலனே மறந்த கடமையை நினைவூட்டும்
பண்ணின் முறையையெல்லாம் வண்ணமுடன் தீட்டும்
பாலமுதாய் மொழியின் சீலம் தனைக்கூட்டும்
-சிலம்போசை

## வழிகாட்டும் ஒளி!

ராகம்: ஜெகன்மோகினி    தாளம்:சதுஸ்ரஜாதி அடதாளம்

எடுப்பு

வாழ்வில் இன்பம் காணவழி காட்டும் ஒளியே
வள்ளுவர் மொழியே!
மதுரத் தமிழிலே அறம் பொருள் இன்பமென
மடமை இருளகற்றி
-வாழ்வில்

தொடுப்பு

ஆழ்கடலின் அடியில் அகப்படும் முத்தெனவே
அரும்பெருங்கருத்தெலாம்
அழகுடனே இணைத்து அவனியிலே அளித்த
அருமைத் திருக்குறளே!
-வாழ்வில்

அமைதி

சீரும் சிறப்புமெனச் சிந்தனை நூல்கோடி
சேர்ந்து விளைந்ததெனச்
செங்கதிரோன் சுடரால் செந்தாமரைக்காடு
எங்கும் மலர்ந்ததெனப்
பாரெல்லாம் பன்மொழியில் பக்குவமாய் எழுதி
பகுத்தறிவைத் தெளிக்கும்
நூறுபத்து முன்னூற்று முப்பதுவாம் குறளே
நுணுக்கமுடன் அறிந்தால்
-வாழ்வில்

# இலக்கியப் பொழில்

ராகம்: மணிரங்கு                    தாளம்: மிஸ்ரஜம்பை

எடுப்பு

இலக்கியப் பொழில் கண்ட புலவோரே!-உம்
இணையில்லாத் தொண்டுக்கே வணக்கம் வணக்கம்
-இலக்கிய

தொடுப்பு

சிலம்பும் மேகலையும் சிந்தாமணி துலங்க
சிறந்த குறள்மலரால் பெருமைமிக விளங்க
-இலக்கிய

அமைதி

அகம்புறம் நானூறின் அறிவினைக் கூட்டி
அய்ங்குறுநூறில் சொல்லழகினைக் காட்டி
பகைவரும் மயங்கிடும் பரிபாடல் வளம் தீட்டி
பதிற்றுப் பத்துடனே கலித்தொகைக் கவிநாட்டி
-இலக்கிய

## கன்னித் தமிழ்!

ராகம்: சிந்துபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

கன்னித்தமிழ் வளர்ந்த கதை சொல்லுவோம்
கவலைகள் ஏதுமின்றிக் களிப்பெய்துவோம்
-கன்னி

தொடுப்பு

பொன்னிநதிபாயும் பூம்பொழிலிலே-மன்னர்
போற்றி வளர்த்த மூன்று சங்கமதிலே
-கன்னி

அமைதி

வையகமே மகிழமெய்யை யுரைத்தார்-அந்த
வள்ளுவர் முப்பாலைப் பலர்வாரி சுவைத்தார்
அய்யன் இளங்கோ அரசபோகம் வெறுத்தார்-ஆனால்
அழியாச் சிலப்பதிகாரம் அமைத்தார்
-கன்னி

# பொருளடக்கம்

## வள்ளல் முனிவர்

ராகம்: ஆபேரி தாளம்: ரூபகம்

எடுப்பு

உருகி உருகிப் பாடினாரே!
உள்ளம் கனிய வள்ளல் முனிவர்
-உருகி

தொடுப்பு

பெருகுதே கண்ணீர் அவர் அருட்பாலில்
பேதமை நீங்கும் நீதியின் தேர்வில்
-உருகு

அமைதி

வையக வாழ்வின் பொய்மை உணர்ந்து
வாடிவருந்திப் பாடல் புனைந்து
கையினைக் கட்டிக் கானில் அலைந்து
கருணை வடிவாய்த் தனியே நினைந்து
-உருகி

## அருமை வள்ளல்!

ராகம்: கானடா தாளம்: ஆதி

எடுப்பு

அருளின் பொருளறிந்தேன் அருமை வள்ளால்-நின்
அற்புதப் பாடலைச் சொற்பம் சுவைத்தபோதே
-அருளின்

தொடுப்பு

இருளெனும் மாயையில் ஏங்கித் தவித்த நான்
இதந்தரும் உமது இன்பத் தமிழிசையால்
-அருளின்

அமைதி

நல்வடலூரில் நலமுடன் சேர்ந்து
ஞானசபைதனை ஆனந்தமாய்ச் சார்ந்து
பல்வகை நீதியினைப் பாங்குடன் ஆராய்ந்து
பாரினைச் செப்பனிட்டீர் பண்பிலே தோய்ந்து
-அருளின்

## எங்கள் ராமலிங்கம்

ராகம்: மாயாவர்த்தனி தாளம்: ஆதி

எடுப்பு

இன்பத்தமிழமுதம் எங்கள் ராமலிங்கம்
இசையின் பொருளறிந்தால் இளகாதோ தங்கம்
-இன்ப

தொடுப்பு

வன்பகையை விடுத்தேவாழும் வகைபுரிந்தார்
வாடும் பயிரைக் கண்டே வருந்திக் கண்ணீர் சொரிந்தார்
-இன்ப

அமைதி

அன்பும் கருணையுமே அவர் காட்டும் நல்வழி
ஆனதினா லன்றோ அருள் கூட்டுதாம் விழி
வம்பிலும் வாதிலுமே வளர்வதோ வீண்பழி
வழியும் செழுந்தேனன்றோ வடலூரார் வாய்மொழி
-இன்ப

## வள்ளலார் எங்கே?

*ராகம்: பிலஹரி* *தாளம்:ஆதி*

எடுப்பு

*வாரீர் என அழைத்த வள்ளலார் எங்கே?*
*வடலூர் சென்றனைவரும் தேடுவோம் ஒருங்கே*
*-வாரீர்*

தொடுப்பு

*பாரினில் சாதிமதப் பகைமை கண்டுருகி*
*பன்னெடு நாளாய்க் கண்ணீர் மிகப் பெருகி*
*-வாரீர்*

அமைதி

*மனிதரை மனிதராய் வாழவைத்தார்-அந்த*
*மாசிலா ஞானசபை மாதவத்தார்*
*புனிதரும் கைகூப்பும் புண்ணியத்தார்-அந்தோ*
*போற்றுதற்கில்லாமல் ஏன் மறைந்தார்?*
*-வாரீர்*

## உண்மைத் துறவி

ராகம்: விஜயநாகரி தாளம்: ஆதி

எடுப்பு

உள்ளத்தில் ஒளியேற்றி உண்மைவழி நடந்த
உத்தமனாம் புத்தன் உரைத்த மொழியறிவோம்
-உள்ளத்தில்

தொடுப்பு

பள்ளத்தை நாடியே பாய்ந்தோடும் வெள்ளமாய்ப்
பாமரர் உயர்ந்திடப் பகல் இரவாய் அலைந்து
-உள்ளத்தில்

அமைதி

மன்னவனானாலும் தன்னையே தானுணர்ந்து
மாளிகை வாழ்வெல்லாம் கானல்நீராய் நினைந்து
இன்னல் படுவோரின் இடரினையே களைந்து
இன்பமெல்லாம் உயிர்கள் அன்பே யெனத்தெளிந்து
-உள்ளத்தில்

# வள்ளுவப் பெரியார்

ராகம்: பேகடா தாளம்: மிஸ்ரசாபு

எடுப்பு

வள்ளுவ நின் வாய்மொழியின்
வன்மைதான் என்னே !
வகையுடன் சுவைத்திடில்
வாதுகளேது பின்னே - திரு

-வள்ளுவ

தொடுப்பு

தெள்ளுதமிழ் மணத்தையே
அள்ளித் தெளித்தனையே
தேனென இனித்திடும்
தீஞ்சுவை அளித்தனையே - திரு

-வள்ளுவ

அமைதி

அறம்பொருள் இன்பமெனும்
அற்புதக் கூட்டில்
அதிசயக் குறள்பல
அமைத்தனைப் பாட்டில்
திறமிகு நம் தமிழ்
திருவளர் நாட்டில்
தெவிட்டாப் பெருங்கருத்தைத்
தீட்டினையே ஏட்டில் - திரு

-வள்ளுவ

## வையகம் புகழுது!

ராகம்: கானடா தாளம்: ஆதி

எடுப்பு

வையகம் புகழுதம்மா!-நம்
அய்யன் காந்திசெய்த அற்புதத்தைக் கண்டே
-வையகம்

தொடுப்பு

கையினில் கோலூன்றிக் கருணை நெஞ்சி லூன்றிக்
காத்த சுதந்திரத்தைப் பார்த்தே பரவசமாய்
-வையகம்

அமைதி

அறிஞர்களின் குருவாய் சிறந்திருந்தார்-அந்த
அண்ணலாரை என்றும் எண்ணிடுவோம்
வறியவர் உயர்ந்திட வாழ்ந்துவந்தார்-அவர்
வகுத்த வழியினை மனத்தகத்தே நினைந்தே
-வையகம்

## கருத்தில் நிறுத்திடுவோம்

ராகம்: பெஹாக் தாளம்: ஆதி

எடுப்பு

கருத்தில் நிறுத்திடுவோம்-நம்
காந்தி அண்ணல்சொன்ன சாந்தவழி தன்னைக்
-கருத்தில்

தொடுப்பு

சரித்திரமே புகழும் சத்தியமாம் உண்மை
தழைத்திடவே அழைத்த உத்தமரின் உழைப்பைக்
-கருத்தில்

அமைதி

போற்றிப் புகழ்வதெனில் யார்க்கும் மிக எளிது
பொருள்குவிந்தால் சிலைகள் நிறுவுவதும் எளிது
ஆற்றல் மிகும் அண்ணல் அறிவுரையே அரிது
அதைமறந்தால் நிதமும் நெகிழ்வதென்ன பெரிது
-கழுத்தில்

## அவ்வை பாடல்

ராகம்: சாவித்திரி தாளம்: ஆதி

எடுப்பு

சொன்னதை மறவாதே-அவ்வை
ஆய்ந்த அறிவனைத்தும்
தோய்ந்த தமிழ்மொழியால்
-சொன்னதை

தொடுப்பு

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமென்றும்
அறம் செயவிரும்பென்றும் திறமுடன் என்றென்றும்
-சொன்னதை

அமைதி

ஆத்திசூடி கொன்றை வேந்தனில் நீதி
அளித்தாள் மூதுரை நல்வழியும் ஓதி
சாத்திரமாம் ஞானக்குறள் பந்தனந்தாதி
சகலமும் இவள் நூலென்றறிவாயோ சேதி
-சொன்னதை

## அமுதக் கவி

*ராகம்: திலங்* *தாளம்: ஆதி*

எடுப்பு

போதுமெனப் புகல ஏதும் மனம் வருமோ!
புவிபுகழும் அமுதக் கவிபாரதி தமிழைப்
-போதுமெனப்

தொடுப்பு

மேதினியில் எவரும் வாது வழக்கற்று
மெய்யன்புடன் வாழப் பெய்யும் கவிமழையைப்
-போதுமெனப்

அமைதி

நல்ல நல்ல கருத்தைச் சொல்லமுதாய் வடித்தார்
நாட்டின் விடுதலைக்குப் பாட்டுபல தொடுத்தார்
எல்லைமீறும் அடிமைத் தொல்லைகண்டே துடித்தார்
இதந்தரும் சுதந்திரப் பதந்தனைக் கொடுத்தார்
-போதுமெனப்

## பாரதி பாட்டு

ராகம்: கரகரப்பிரியா தாளம்: ஆதி

எடுப்பு

ஏதேதோ என்நெஞ்சில் போதம் பொழியுதடீ
எந்தமிழ்ப் பாரதியின் விந்தைக் கவிகேட்டால்
-ஏதேதோ

தொடுப்பு

பேதம் அகன்றிடும் கீத முரசொலித்தே
பின்னேவரும் பலனை முன்னே சொன்னார் அதனால்
-ஏதேதோ

அமைதி

கற்பனையால் செழித்த சொற்சுவையோடு
கவியமுதம் பொழிந்தார் புவியில் அன்போடு
பற்பலவகையிலும் பைந்தமிழ் நாடு
பாரில் சிறந்திடப்பட்டாரே பாடு
-ஏதேதோ

# புரட்சிக் கவிஞர்

ராகம்: அடாணா தாளம்: ஆதி

எடுப்பு

தாசனென்று தன்னைச் சொன்ன பாரதிதாசன்-இவர்
தாசனல்ல பாரதியின் தமிழுக்கு நேசன்-தாசன்

தொடுப்பு

ஊசலாட்டத் தமிழர்களை ஊக்கமாக்கினார்-புரட்சி
உரமூட்டும் கவிதைகளால் தூக்கம் போக்கினார்-தாசன்

அமைதி

பைந்தமிழின் சொல்லழகைப் பறை சாற்றினார்
பாரதியை மிஞ்சிவிட்ட நடை காட்டினார்
நைந்திருந்த பழமை விட்டு புதுமை சூட்டினார்
நயமான உவமைகளால் மெருகை ஏற்றினார்-தாசன்

கன்னல்தமிழ் வண்ணத்திற்கே இலக்கியமானார்-பெருங்
கவிஞனென்ற பெயருக்கோர் இலக்கணமானார்
புன்னைமர நிழலாகக் குளிர்ச்சி யூட்டினார்-ஆனால்
புரையோடிய மடைமை மாய புரட்சி மூட்டினார்-தாசன்

## எத்தனை பேர் ?

ராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

எடுப்பு

எத்தனைபேர்கள்தான் பிறப்பார்-இனியும்
இத்தரை தனிலே சத்தியமே வளர்க்க
-எத்தனை

தொடுப்பு

புத்தரும் ஏசுவும் புகழ்மிகு காந்தியும்
தத்துவ வள்ளலாரும் தாயுமானார் போலும்
-எத்தனை

அமைதி

கண்டதேகாட்சி யென்றும் கொண்டதே கோலமென்றும்
கருத்தழிந்தே அலையும் கசடர்களின் உலகில்
எண்டிசையும் அன்பும் இன்பமுமே நிலவ
இன்னல் பல அடைந்த அண்ணல் அவர்களைப்போல்
-எத்தனை

## ஞானத் திருமலர்!

*ராகம்: நாராயணி* *தாளம்: ஆதி*

எடுப்பு

ஞானத்திரு மலரின் நறுமணம் வீசுதடீ
நாடியே கொய்திடுவோம் ஓடியே வாடிதோழி!
-ஞான

தொடுப்பு

மோனத்தவ வனத்தில் தானாகப் பூத்ததுவாம்
முத்து முத்தாய் அருட்தேன் நித்தமும் சிந்திடுதாம்
-ஞான

அமைதி

அன்பெனும் தென்றலிலே அசைந்தசைந்தாடுதாம்
அகந்தைப் புயலடித்தால் அதன்முகம் வாடுதாம்
இன்பமகரந்தமதை எங்கெங்கும் தூவுதாம்
எழிற்கவி வண்டினங்கள் இன்னிசை பாடுதாம்
-ஞான

## பெயர்த்தியின் பேச்சுமழை!

ராகம்: வசந்தபைரவி தாளம்: ஆதி

எடுப்பு

பாமாலை சூடிவரும் கீதமாலிகா-நீ
பண் கலந்து பாடிவரும் ராகமாலிகா
-பாமாலை

தொடுப்பு

பூமாலை வாடும்போது மணம் கொடுக்காது-இந்தப்
பாமாலை எந்நாளும் மணம் குறையாது
-பாமாலை

அமைதி

பூவினையே சுற்றிவரும் பொன்வண்டாகும்-கல்வி
புரியும்போது நாவினிலே கற்கண்டாகும்
யாவருக்கும் உனது பேச்சு காந்தமாகும்-குடும்பம்
அனைவரின் மனமுமே சாந்தமாகும்
-பாமாலை

கொழுந்தெனும் பெயர்தானே குழந்தையானது-மருக்
கொழுந்தாக இதயமெல்லாம் பசுமையானது
மழைகூட மனிதராலே மாசுபட்டது-கீத
மாலிகா உன் பேச்சுமழை மாசுபடாது
-பாமாலை

## மயக்கம்! மயக்கம்! மயக்கம்!

ராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

எடுப்பு

மயக்கம் மயக்கம் மயக்கம்
மயக்கத்தில் பிறந்து மயக்கத்தில் வளர்ந்து
மயக்கத்தில் மறையும் மனிதா!-நீ
பெற்றவர் மயக்கத்தில் பிறந்தாய்
தொட்டிலின் மயக்கத்தில் வளர்ந்தாய் -மயக்கம்

தொடுப்பு

கற்றவனென்று பெயரெடுக்க-உயர்
கலைகளில் அறிவு மயக்கம்-உன்
கட்டான வயதில் கன்னியைக் கண்டு
கண்களில் காதல் மயக்கம் -மயக்கம்

அமைதி

கல்யாணமானதும் காசைத்தேடவே
செல்லுமிடமெல்லாம் மயக்கம்-சிறு
பிள்ளைகள் பேசும் மழலையைக் கேட்டு
உள்ளத்தில் பேரன்பு மயக்கம் -மயக்கம்

ஒருவனுக்கொருவன் பெரியவனென்றே
ஓங்கியே வரும்புகழ் மயக்கம்
நரைதிரைவந்ததும் நாலுபேரிடம்
உரைத்திடும் தத்துவத்தின் மயக்கம் -மயக்கம்

கடைசிவயதில் கைத்தடி ஊன்றிக்
கால்கள் தடுமாறும் மயக்கம்-பல
கதைகளை முடித்துப் பயணம் செல்வதைக்
காண்பவர் நெஞ்சிலும் மயக்கம் -மயக்கம்

# 1950 ஆம் ஆண்டு இசைஅருவி நூல் வெளியானபோது பத்திரிகைகளின் அன்றைய கருத்துக்கள்:-

**(8.8.50) சுதேசமித்திரன்-சென்னை**

சமீபகாலத்தில் வெளிவந்துள்ள சில தமிழிசைப் புத்தகங்களின் வரிசையில் ''இசைஅருவி'' யும் ஒன்றாகும். இதன் ஆசிரியர் திருச்சி ஜி.தியாகராஜன் எளிய தமிழில் பலபாடல்களை எழுதி யிருக்கிறார். தமிழைப் பற்றிப் பாடல்களும், காந்தியடிகள் பாரதியார் பற்றிய பாடல்களும் நன்றாக இருக்கின்றன. புதிய தமிழ்ப்பாடல்கள் பாடவேண்டுமென ஆர்வமுள்ள வித்வான்கள் இந்தப் புத்தகத்தை உபயோகப்படுத்திக் கொள்ளலாம். தமிழைப் பற்றி ''எல்லையில்லா இன்பம்'' என்ற தலைப்பில்

''சங்ககாலம் தந்த தனித்தமிழ்வளமும்
சத்தியபாரதியின் புத்துலகக் கருத்தும்
அங்கமெலாம் சிலிர்க்கும் அருங்குறள் வாக்கும்
அன்புடனே கேட்கில் துன்பமுடனே போக்கும்''

என்று எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

★

**5.11.50 தினமணி-சென்னை**

சொல்லழகும், பொருட் சுவையும், இசைஞானமும் மிக்க அருமையான தமிழ்ப் பாடல்கள் இந்நூலில் காணப்படுகின்றன. இசை அரங்குகளில் பாடப் பெறுவதற்கு ஏற்றமுடையன.

கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை ஆஸ்தான கவிஞர் ராமலிங்கம்பிள்ளை இசைச் செல்வர் தீவனூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகியோர் ஆசிரியரின் கவிதையைப் பாராட்டி தமிழ்மக்களுக்குச் சிபாரிசு செய்திருக்கின்றனர்.

''இனிய எளிய நடையில் உள்ள இப்பாடல்கள் தமிழில் நல்லகீர்த்தனங்கள் இல்லையென்ற குறையைப் போக்க உதவும்

எல்லாச் சமயமும் ஒன்றே என்ற கருத்துடன் எழுதப் பட்டுள்ள இக் கீர்த்தனங்கள் நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்துக்கும் உறுதுணையாயிருக்கும். இசை அருவியில் படிந்து நான் பெற்ற இன்பத்தை தமிழர் அனைவரும் பெறுவார்களாக! என்று கவிமணி கூறியுள்ள புகழுரைகள் மிகையாகா.



**ஆசிரியர்: திரு.நாரணதுரைக்கண்ணன், 1.1.51 பிரசண்ட விகடன்-சென்னை**

தமிழிசைப் பாடல்கள் நிரம்பவேண்டும். எங்கும் இசை வாணர்களால் தமிழ்ப்பாடல்களே பாடப்படவேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியுள்ள இக்காலத்தில் ''இசைஅருவி'' போன்ற இசைப்பாடல் நூல்கள் வரவேற்கத் தக்கவை. இசைப் பாடல்கள் என்று சொல்லி எத்தனையோ வெற்றுப்பாடல்கள் பொருளற்ற-ஏன்? சொல்லினிமை கூட அற்ற வார்த்தைக் கோவைகள் ஒருபக்கம் குவிந்து இசையுலகை மாசுபடுத்திவர ''இசைஅருவி'' போன்ற நல்ல இசைப் பாடல்கள் வெளி யாகியிருப்பது நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. இசை ஞானம் சிறிதுமில்லாமல் இசைப்பாடல்கள் இயற்றுவோர் பலர்

போலல்லாமல் இளைஞர் தியாகராஜன் இசைப்புலமையோடு இயல் அறிவும் கொண்டு பாடல்கள் இயற்றியிருக்கிறார். இச் சிறப்பினால்தான் இவருடைய பாடல்கள் இனிமையாகவும், நன்றாகவும் அமைந்திருக்கின்றன.



**(22.10.50) தினமணிக்கதிர்-சென்னை**

தமிழிசை இயக்கம் ஆரம்பமாவதற்கு முன்பு தமிழில் எத்தனையோ சாகித்யங்கள் இருந்தன. இருந்தபோதிலும் தமிழிசை இயக்கம் தமிழில் புதிய இசைகள் அமைப்பதற்கு புதிய உத்வேகம் அளித்தது என்றுதான் சொல்லவேண்டும். அதன் விளைவாக எழுந்தவையே ''இசை அருவி'' என்ற தலைப்பில் ஜி.தியாகராஜன் புனைந்துள்ள இசைப்பாடல்களாகும்.



**29.10.1950 வீரகேசரி-கொழும்பு**

நம் பெரியோர்கள் இசைப்புலவர்கள் பண்பைப் பின்பற்றி ''இசைஅருவி'' நூலாசிரியர் திருச்சி ஜி.தியாகராஜன் பல கீர்த்தனங்களை இயற்றியுள்ளார். இன்னும் வள்ளுவர், வள்ளலார், பாரதியார், கம்பன் காந்தி முதலியவர்களைப் பற்றியும் தமிழின் பெருமை, தமிழ்த்தாய், புதுயுகம் பற்றியும் இசைப்பாடல்களை எழுதியுள்ளார்.

கருத்துரையில் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை கூறியபடி இக் கீர்த்தனங்கள் இனிய எளிய நடையில் அமைந்திருக்கின்றன. தமிழிசை வளர்ச்சிக்கு இம்மாதிரியான இசைப்பாடல்கள் பெரிதும் உதவும்.



**(30.10.50) லோகோபகாரி-சென்னை**

இன்று எத்தனையோ பேர் பாடல்கள் எழுதுகின்றனர். அவைகளைப் பாடல்கள் என்று எழுதினவர்களே சொன்னால் தான் புரியும். இத்தகைய பலபாடல்கள் வெளிவந்துலவும் இக்காலத்தில் நல்ல இசையும், கருத்தும் திருந்திய மொழியும் உடைய ஒரு பாடல் தொகுதி வெளிவந்த தென்றால் தமிழன்பர்கள் யார் தான் பாராட்டாமல் இருக்கமுடியும்?

அன்பர் திருச்சி.ஜி.தியாகராஜன் அவர்களுடைய பாடல் களைப் பலவித்வான்கள் வானொலியிலே பாடிவருகின்றனர். நமது பத்திரிகையிலும், பலபத்திரிகைகளிலும் வெளி வந்திருக்கின்றன. இப்பாடல்கள் தமிழிலே இசைப்பாடல்கள் போதுமானவை இல்லை என்ற குறையை நீக்கக் கூடியவை.

அன்றியும் தமிழ்ப் பாடல்கள் சங்கீதத்திற்கு அவ்வளவு சுகப்படாது என்று கூறுவோர் மண்டையில் அடிப்பவை. தமிழன்பர்கள், இசை அன்பர்கள் அனைவரும் ஆதரிக்க வேண்டிய அரிய வெளியீடு.

(ஆசிரியர்கள்: பரலி.சு. நெல்லையப்பர்,
சாமி சிதம்பரனார்.)



**செப்டம்பர் 1950. தமிழர் நாடு: திருச்சி, ஆசிரியர். திரு.கி.ஆ.பெ.விசுவநாதம்**

வானொலி நிலையத்திலும், இன்னிசை அரங்குகளிலும் பாடப்பட்டுவரும் சிறந்த பாடல்கள் நிறைந்தது. திருச்சி. ஜி. தியாகராஜன் இயற்றியுள்ள ''இசைஅருவி'' நூல்.

**அமுதசுரபி, சென்னை, ஆசிரியர்வேம்பு-செப்டம்பர் 1950.**

தேமதுரத்தமிழோசை தெருவெல்லாம் செழிக்கச் செய்யும் பணியில் இந்த இசைஅருவியின் ஓசை உதவி செய்கிறது. கவிமணி ஸ்ரீதேசிகவிநாயகம்பிள்ளை கூறுவதுதான் நமது அபிப்பிராயமும். தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இல்லையென்ற குறையைப் போக்க திரு.தியாகராஜன் போன்ற கவிஞர்கள் முன்வந்திருப்பது தமிழர்களின் பாக்கியமேயாகும்.

★

**ஜனவரி 1951 குண்டூசி-சென்னை.**

தமிழிசை மறுமலர்ச்சி பெற்றுள்ள தமிழ்நாட்டில் புதிது புதிதாய்த் தமிழ்ப்பாடல்கள் வெளிவருவது வரவேற்கத் தக்கதாகும். படிப்பதற்கென்று வெளிவரும் பாடல்கள் போலன்றி இசை கலந்து இனிப்பதற்காக அமைக்கப்பட்ட ‘‘இசைஅருவி’’ப் பாடல்கள் உயர்ந்தகருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கின்றன.

‘‘தமழில் நல்ல கீர்த்தனங்கள் இல்லையென்ற குறையைப் போக்க ஸ்ரீ தியாகராஜன் போன்ற கவிஞர்கள் முன்வந்திருப்பது தமிழர்களது பாக்கியமேயாகும்’’ என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களாலும் ‘‘தங்கள் கவித்வத்தை மனமார வாழ்த்துகிறேன்’’ என்று ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்களாலும், ‘‘இயற்கையாகவே பாடல் இயற்றும் தன்மை தங்களுக்கு இருக்கிறது’’ என்று கீவளூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களாலும் போற்றப்பட்டுள்ள பாடல்தொகுதிஇது.

தமிழ்மொழியின் மீது பாடியுள்ள பாடல்கள் ஆசிரியரின் கவியுள்ளத்தை வெளிப்படுத்துகின்றன.



**தினத்தந்தி 7.7.52**

''தமிழிலே இசைக்கீர்த்தனங்கள் இல்லை'' என்ற கூச்சல் நம்நாட்டில் இருந்தகாலம் ஒன்றுஉண்டு. நெடுநாளாகி விடவில்லை. பத்துப் பனிரண்டு ஆண்டுகளுக்கு முன்புதான். தமிழிசை இயக்கத்தைக் காலஞ்சென்ற ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார், ஆர்.கே.சண்முகம் செட்டியார் பணபலமீந்து ஆதரிக்க ஆரம்பித்தவுடன், நம் கவிமணிகள் தீட்டிய தீஞ்சுவைப் பாடல்களெல்லாம், கரையான் பிடித்துக் கவனிப்பாரற்றுக் கிடந்த' காகிதங்களிலிருந்து விடைபெற்றுப் பிரசுரமேறின. தமிழிசை இயக்கமும் ஓரளவு வளர்ந்தது. கவிமணியும், சுத்தானந்த பாரதியும், பாரதிதாசனும் போன்ற கவிஞர்கள் பழமையிலிருந்து புதுமைக்கருத்திலே அடியெடுத்து வைத்தனர். மக்களின் அமோக ஆதரவைப் பெற்றனர். இளம் கவிஞர். ஜி.தியாகராஜன் இப்பொழுது ''இசைஅருவி''யை நம்முன் படைத்திருக்கிறார். ஆரம்பமுதல் இறுதிவரை அருவியைப் போலவே இசை பொழிந்து ஓடுகிறது. ''கருத்தில்லையேல் கலை இல்லை'' என்பது பெர்னாட்ஷா அறிவுரை. அதைமெய்ப்பிப்பது போல் ராகம், தாளம், எதுகை, மோனை போன்ற இசை இலக்கணத்துடன், முற்போக்குக் கருத்துச் செறிவுகளையும் வாரி இரைத்திருக்கிறார்'' பாடிப்பரவசப்படுத்த கலைஞர் உண்டா? என்பதே நம் கவலை.



**நவ இந்தியா-கோவை. 27.4.52**

"இசை அருவி" ஆசிரியர்: ஜி.தியாகராஜன். தன் முயற்சி, சத்தியவழி, சிந்தனைசெய், போன்ற பல பொருகள் பற்றிய பாடல்கள் உள்ளன. பாடல்கள் எல்லாம் நல்ல எளிய நடை முறையில் எல்லோருக்கும் புரியும் விதத்தில் இருக்கின்றன. தமிழ் பாடல்கள் போதிய அளவில் வெளிவருவதில்லை என்ற குறையைத் தீர்க்க இது மாதிரி வெளியீடுகள் வருவதை வரவேற்க வேண்டும்.



**1952 ஆனந்த போதினி-சென்னை**

இசைப்பாடல்களை இயற்றுவதில் புலமைவாய்ந்த நண்பர் ஜி.தியாகராஜன் அவ்வப்போது இயற்றி, பிரபல இசைவாணர்களைப் பாடச்செய்து, அந்த இசைப்பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து "இசைஅருவி" இரண்டாம் பகுதியாக வெளியிட்டிருக்கிறார். இத்தொகுப்பில் தமிழ்மொழியின் பெருமையைப் பலபட விவரிக்கும் பாடல்கள் அன்றி மக்கள் வாழும் முறையை வகுத்துக் கூறும் பாடல்களும் காணப் படுகின்றன. அத்துடன் அகங்காரம் பேராசை, கோபம், மதம், மாற்சரியம் முதலிய சிறுமைக்குணங்களை விட்டொழித்து மக்கள் நல்வாழ்வு வாழ வேண்டுமென்று அறிவுரை கூறியிருக்கிறார்.

"இந்தப் புத்தி ஏனுனக்கு விந்தை மனமே-தினமும்
ஏதாகிலும் பலரை இகழ்ந்தே மகிழ்ந்துலவும் -இந்தப் புத்தி
என்ன சுகமடைவாய் தன்னலப் பேயே நீ
ஏழை எளியவர் நல்வாழ்வையெல்லாம் பறித்து-என்ன
வீணரெல்லாம் புகழ்ந்தே வாழ்நாளில் மகிழாதே

காணாத பொருளெல்லாம் கண்டதாய் உளறாதே
ஆணவம் தலைகக்கேறி அனுதினம் நிலைமாறி
அமைதியைக் குலைத்திடும் மமதையில் களித்திடும்
மடமையெனும் புயலில் மதி மயங்காதே
கடமைதனை மறந்தே கருத்தழியாதே

என்பது போன்ற பல அடிகளில் சிந்திக்கத்தக்க செய்திகளைக் கூறியிருப்பது பாராட்டுக்குரியதாகும். ஒரே வரியில் சொல்ல வேண்டுமானால்

நல்லவழி சொல்லுவாய் - மனமே
நாட்டினிலே எவர்க்கும் பாட்டின் மூலம் - சுவைக்கும் - நல்ல

என்று இவ்வாசிரியரே கூறியிருப்பதுபோல் இசைப்பாடல்கள் மூலம் நாம் அறிந்த வரையில் மக்களுக்கு நல்லவழி சொல்லியிருக்கிறார். ''இசைஅருவி''யில் வெளிவந்துள்ளது போன்ற மக்களுக்குப் பயன்தரும் பாடல்கள் தாம் இனி வெளிவரவேண்டும்.



**Federated India. May 1952.**

" Isai Aruvi" is a collection of Tamil Songs Composed by G. Thiagarajan breathing Communal harmony, a Sentiment of love and appreciation of the Tamil language, and admiration for our great poets like Thiruvalluvr, Kambar and Ilangovadigal. The songs disclose a high degree of literary and poetic excellence as well as ardent patriotism. The Raga with the appropriate Tala in which each song is intended to be sung is mentioned. The book is sure to meet with the appreciation of all lovers of Music.

